# ஞானபோதினி.

ஸம்புடம் IV.] } 1901ஸ்ரீ மார்ச்சுமீ 20உ { [புத்தகம். 8.

## மகாதேவ கோவிந்த ரானடே.

புதியநூற்றுண்டு பிறந்து நமது தேயத்தோரெல்லோருக்கும் இன்பத்தை விளைக்கு மென்றிருந்தபோழ்து நமது நாட்டோருக்கு ஆற்றுத துன்பத்தை விளைத்த ஒரு கடுஞ்சாவு நிகழ்ந்தது. நமது நாட்டோரெல்லோருக்குங் குருவைப்போலிருந்தவரும், அபரிமிதமான புத்தி கூர்மையுள்ளவரும் முழுதும் அகங்காரமற்றவருமான மகான் மகாதேவ கோவிந்தரானடே நமது உலகத்தை விட்டு விண்ணுலகஞ் சென்றுர்.

இவர் 1843-ம் வருஷத்திற் பிராமண சாதியில் உயர் குலத்திற் கோலாப்பூரிற் பிறந்தவர். இவருக்குச் சகோதரர்கள் இருவர். ஒருவர் இந்தூர் நாட்டில் உயர்ந்த பதவியில் அமர்ந்திருக்கின்றுர். மற்றொருவர் தென்னுப்பிரிக்கா ராணுவத்தில் உத்தியோகம் வகிக்கின்றுர். ஆரம்பத்திலே பம்பாய் எல்பின்ஸ்டன் கலாசாலையிற் படிக்கத் தொடங்கினர். இவருடைய புத்தி சாதுரியத்தையும், மேலான அறிவையும் இவருக்கு உபாத்தியாயர்களா யிருந்த ஐரோப்பியர்களே கண்டு மிக்வும் வியந்தார்கள். வெகு சீக்கிரத்திற் பி. ஏ., எம். ஏ. பரீக்ஷைகளிற்றேறினுர். இவருக்கு எம். ஏ. தேறியதும், இவர் எம். ஏ. வகுப்புப் பிள்ளைகளுக்கே, வெகு நேர்த்தியாய்ப் பாடஞ் சொன்னுரென்றுல், நம் நேயர்களே அவரது அறிவு மிகவும் ஆழ்ந்ததென்று அறிந்துகொள்ளலாம். பிறகு இவர் சட்டப் பரீக்ஷையிலுந்தேறி, பம்பாய், உயர் நீதிசாலையில் நியாயவாதியாயினர். ஆனுல் அவர் வெகுநாள் வக்கீலாயிருக்கவில்லை. 1866 - ஆம் வருஷம் முதல் உதவி நியாயாதிபதியாகவும், ஜில்லா நியாயாதிபதியாகவும், சிறுவழக்கு நியாயாதிபதியாகவும், இன்னும்

பல உயர்ந்த பதவிகளிலும் அமர்ந்தார். கடைசியாக 1893 - ஆம் வருஷத்தில் இவர் தம்மாணுக்கரு ளொருவராகிய கனம் பொருந்திய டிலாங் அவர்கள் இறந்தபோனவுடன், பம்பாயிலுள்ள உயர் நீதிசாலை நியாயாதிபதியாக நியமிக்கப்பட்டனர்.

இம்மகானுடைய பெருமையை யெல்லாம் சுருக்கமாய் எழுதுவதென்பது அசாத்தியமான காரியம். நமது தேசத்தை எவ்விதத்திலாவது முன்னுக்குக் கொண்டுவரவேண்டுமென்று கங்கணங் கட்டிக்கொண்டு உழைத்தவர்களுள் இவர் பிரதானமானவர். எச்சபையா யிருந்தாலுஞ்சரி, எவ்விடத்திலாவது நடத்தப்பட்டு வந்தாலுஞ்சரி, அது தேசத்துக்கு நன்மை பயக்கத்தக்கதாய்மட்டுமிருக்கவேண்டும். அவர் அதற்காக உழைப்பாரென்பது திண்ணம். அவர் ராஜ்ஜிய உத்யோகஸ்தரா யிருந்ததுடன் நமது காங்கிரஸ் மகாசபையை நடாத்துபவருள் தலைநின்றவருமா யிருந்தார். காங்கிரஸ் மகாசபையை ஆதியில் ஏற்படுத்தினதும் இப்பேரறிவாளரே. தாம் சாமளவும் அதற்காகப் பெரிதும் பாடுபட்டு உழைத்தார். அதனால் அவருக்கு எவ்வளவோ நஷ்டங்கள் வந்தன. அவைகளையெல்லாம் அவர் நஷ்டமாகவே பாவிக்கவில்லை.

"நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது"

என்ற வள்ளுவனார் வாக்கு இவர் விடயத்தி லுண்மையாகவே முடிந்தது. தமது முதிர்ந்த அறிவுகொண்டு அம்மகா சபையை முன்னுக்குக் கொண்டுவரும் வழிகளை நாடிச் சிறிதேனுஞ் சலியாமல் நடாத்தி வந்தனர்.

மேலும், இவர் இந்தியர்களுக்கு எவ்வளவு உயர்ந்த பதவி கிடைக்கக்கூடுமோ அவ்வளவு உயர்ந்த பதவியி லமர்ந்திருந்தும், சிறிதேனும் அகங்கார முள்ளவரல்லரா யிருந்தார். ஒருவன் எவ்வளவு தாழ்ந்தபதவியி லிருப்பவனா யிருந்தாலும் அவரைப்போய் எளிதிற் பார்க்கலாம். எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பேசிக்கொண்டிருக்கலாம். அவர் காட்சிக்கு எளியார், இன்சொலுடையார், அவருச்குக் கோபமென்பது இன்னதென்று தெரியாது. யாரேனும் இரண்டு எளியோர்கள் தங்கள் வழக்கைத் தீர்த்துக்கொள்ள அவரிடம் வந்து சேர்ந்தால், அதை முழுவதும் விசா

ரித்து, அவர்களைச் சாந்தப்படுத்தி வழக்கைத் தீர்த்தனுப்புவார். அந்தோ! இவ்வளவு உயரிய குணமுள்ளோர் வேறு யாரேனுமுளரோ? இத்தகைய பேரறிவாளரை, அன்புடையண்ணலை, அருளறம் பூண்டோரை யிழக்கும்படியான தௌர்ப்பாக்கியத்தையென்னென்றுரைப்பது? நமது தேசத்து வழக்கங்களையெல்லாஞ் சீர்திருத்த வேண்டுமென்ற பேரவாவுடன், தம் வாழ்நாள் முழுவதும் உழைத்தார். இறந்து போவதற்கு 18 - நாட்களுக்குமுன் 'நான் ஹிந்து மதத்தேனுமல்லேன், மகம்மதிய மதத்தேனுமல்லேன், எல்லாருக்கும் பொதுவான கடவுளை வழிபடு மதத்தார்களிலொருவனாவேன்' என்று சொன்னார். 'ஏழைகளுக்கெல்லாம் நேயன்' என்பதே இவருடைய பெயர். நாம் அனுசரித்துவரும் அநேக வழக்கங்களை மாற்றினால் நமது தேசத்திற்கு நன்மையுண்டாகுமென்றும், நாம் இன்ன இன்ன மார்க்கிலுழைத்தால் நலமுண்டென்றுந் தெளிவாய்ப் பலமுறை பேசியிருக்கிறார். இந்து வழக்கச் சீர்திருத்தச் சங்கமென்றே ஒரு சங்கமேற்படுத்தி யிருக்கின்றார். இவர் மிகுந்த பரோபகாரி. தமது புத்தியினாலேயன்றித் திரவியத்தாற் பலருக்கும் உதவி புரிந்திருக்கிறார். இவர் இறந்தது நமது நாட்டாருக்கே அளவிடக்கூடாத பெருநஷ்டமென்பது ஒருதலை.

இவர் பம்பாய் மாநகரத்தில் நியாயாதிபதியா யிருக்கும்பொழுது உயர்ந்த அறிவுடன், நியாயத்தையே கடைப்பிடித்து நடந்து வந்தார். அவரோடுகூட இருந்த மற்றைய நியாயாதிபதிகளெல்லாருக்கும் இவரிடத்தில் மிகுந்த மரியாதையுண்டு. இவர் தீர்ப்புக்களெல்லாஞ் சிறிதேனும் நியாயத்தினின்றும் வழுவினவல்ல. ஆகையாற்றான் அவர் பிணத்தை மயானத்துக்குக் கொண்டுபோனபொழுது வெள்ளைக்காரர்களினுயர்ந்த பதவியை வகிப்போர்களும் அவரது சாவினால் நிகழ்ந்த துக்கம் ஆற்றாமற், கூடவே வந்தார்கள். இவருடைய வாழ்க்கை படாடோப மற்றதும் தீவினையற்றதுமாவதனோடு மேன்மையும் வாய்ந்தது. இம்மகானது ஞாபகம் நமது மனத்தைவிட்டு என்றென்றும் நீங்காதென்று பம்பாய்ப் பிரதான நியாயாதிபதியவர்களாகிய ஜெங்கின்ஸ்என்பவர் சொல்லுகிறார். இவருடைய மேன்மையை யறிந்தே இராஜாங்கத்தார், இவருக்கு ஸி - ஐ - இ பட்டமும், ராவ்பகதூர் பட்டமும் இவருக்குத் தக்க காலத்தில் அளித்தார்கள்.

இவர் அநேகம் புத்தகங்களும் எழுதியிருக்கிறார். அவைகளில் முக்கியமானவை 'மகராஷ்ட்ரர்களின் சரித்திரம் எனப்பெயர் பூண்ட புத்தகங்கள். இன்னும் இரண்டு மூன்று புத்தகங்களிற் சரித்திரத்தை முடிப்பதாக நினைத்திருந்தார். ஐயோ கொடிய கூற்றுவன் இவரைச் சரேலென நம்மைவிட்டுப் பிரிந்துக்கொண்டு போய்விட்டனனே!

இப்படியாய்ச் சகலருக்கும் நன்மை புரிவோரும், மிகுந்த பணிவையுடையவரும், எப்பொழுதும் தமது தேசநன்மையைக் கண்முன் வைத்துக்கொண்டு தமக்குக் கேடுவந்தாலுங் கவனியாதவருமாயிருந்த மகான் இறந்தால் யாவரே துக்கப்படாதார்? இவர் வாழ்நாளை அநேகர்போல வீணுகக்கழிக்கவில்லை. செல்வ மிருந்தென்ன பதவி யிருந்தென்ன? மற்றையோர்களுக்கு இவை யிருப்பதிலென்ன பிரயோஜனம்? இவர்போலும் நல்லறிவாளரிடத்தன்றோ லக்ஷ்மி குடியிருக்கவேண்டும். தெய்வபக்தியில் மிகவு மாழ்ந்து பரமனே கதியென்று நம்பி, பிறருக்காகவே தமது புத்தி செல்வம் எல்லாவற்றையுங் கொடுத்துவந்த மகானது ஞாபகம் நமது மனத்தைவிட்டு எந்நாளும் நீங்காது. ஒருவருக்கும் மற்றொருவருக்கும் ஒரு ஜாதியாருக்கும் மற்றொரு ஜாதியாருக்கும், ஊன்றிப் பார்த்தால் வித்தியாசமில்லை யென்றும், யாரிடத்திலும் தெய்வத்தன்மை உளதென்றும், யாவரையும், ஒன்றுக்கும் பிரயோஜன மற்றவரென்று சொல்வதிற் பயனில்லை யென்றும் போதித்த பரமபுருஷர் இவர். நன்மையே விரதமாக நயந்து நின்றவராகிய ரானடே, பிறர் தம்மைப் புகழ வேண்டுமென்று ஒரு காரியமுஞ் செய்வதில்லை யென்பதைத் தமது சீலத்தாலும், தூயவொழுக்கத்தாலுங் காண்பித்தார். ஒரு சமயம், சாவு என்பதை ரானடே விவரித்து இவ்வாறு கூறுகின்றனர்: நாம் இறந்துபோகுஞ் சாவொன்றுளதென்றும், சாவு சாகுஞ் சாவொன்றுளதென்றுஞ் சொன்னார். "மெய்ம்மறந்து, ஆன்மா பூரித்து, தனது துன்பம் தேகவருத்தம் முதலிய எல்லாவற்றையு மறந்து, தனது கடமையினின்றும் வழுவாமல் உலகத்துக்கு நன்மையையே நாடி உழைத்து வரும் மகானது சாவு இறந்தது. தனது ஆன்மாவை மறந்து, காயசுகத்திலேயே உழலுகின்றவன் இறக்கிறான். ஆகையால், உலகத்தோர் சாவெனக் கொள்வது சாவன்று" என்று இம்

மகானே சொல்லியிருக்கின்றனர். "அவருக்குப் பின்தங்கி யிருக்கும் நாம் அவர் செய்த நன்மையை மறவோம். அவர் வாழ்நாளை அவர் வீணாகக் கழிக்கவில்லை யென்றும், அவருடைய தெய்வபக்தி, உயர்ந்த கோட்பாடு, உலகத்தோருக்கு நன்மையையே புரியவேண்டுமென்ற ஆசை இவையெல்லாம் நம்மை நன்மார்க்கத்திற்குக் கொண்டு வரவேண்டும். அவர் வாழ்நாளை நமது கண்முன் வைத்துக் கொண்டு அவர் உழைத்த வழியிலேயே நாம் உழைக்க வேண்டும். ஒரே கடவுள் உண்டென்றும், எல்லோருஞ் சகோதரர்களென்றும், அவர் செப்பியபடி நாம் நடந்தொழுக வேண்டும். அவரோ இறக்கவில்லை. ஆகாயத்திற் பளபளவென்று மின்னும் நக்ஷத்திரங்களி லொன்றாயிருந்துகொண்டு, நமது காரியங்களை யெல்லாம் உற்றுநோக்கி, நமது ஒழுக்கங்களைச் சீர்திருத்துகிறார்" என்று பம்பாய் உயர்நீதி சாலை நியாயாதிபதிகளி லொருவராகிய சந்திரவர்க்கர் புகழ்ந் துரைக்கின்றார். உலகமுள்ளவரைக்கும் அவர் பெயர் நமது தேசத்தோர் மனத்திருந்து அவர்களை நல்வழியிலுய்க்கு மென்பதற்கு ஐயமுமுண்டோ?

கு. ரா. ஸ்ரீநிவாஸ ஐயங்கார்.

---

## விக்கிரமோர்வசி நாடகம்.

---

### இரண்டாம் அங்கம்.

**இடம்** :—ஆஸ்தான மண்டபத்தின் ஒரு சார்.
**காலம்** :—எற்பாடு.
**பாத்திரம்** :—விதூஷகன்.

### பிரவேசகம்.

**விதூஷகன்** :—(சிரித்துக்கொண்டு) சிராத்த பட்சியங்களை நினைத்துக் கொண்ட பிராமணனைப்போல இராஜ இரகசியத்தைச் கூட்டமுள்ள விடத்தில் என் நாவினால் அடக்கமுடியவில்லை. ஆகையினால் அரசன் ஆஸ்தான மண்டபத்தினின்றுந் திரும்புகிறவரையும் இந்த இடத்திற்றானே யிருப்பேன். (காரியாசன மண்டபத்தின் ஒரு சார் நிற்றல்).

## நிபுணிகை பிரவேசித்தல்.

நிபுணிகை :—'பெண்ணே ! எதுமுதல் நம் அரசர் சூரியோபஸ்தானஞ் செய்துவிட்டுத் திரும்பினாரோ அதுமுதல் உற்கண்டிதராய்க் காணப்படுகின்றார். ஆதலின் நீ சென்று மித்திரனான ஆரிய மாணவகனிடத்திருந்து அரசன் உற்கண்டிதத்தின் காரணத்தை யறிந்து வருவாயாக' என்று காசிராஜ புத்திரி என்னிடஞ் சொன்னாள்.—இப்பார்ப்பானை எவ்விதம் வஞ்சிப்பது ?- நல்லது.—ஒன்றோடொன்று சம்பந்தமில்லாத புற்களின் நுனியிற்றங்கி யிருக்கும் பனித்துளிகள் வெகுகாலந் தங்கியிராமைபோல இராஜ இரகசிய மிவனிடந் தங்கியிராது. அவனைத் தேடிப்பார்ப்பேன். (பரிக்கிரமித்தல்) இதோ சித்திரத்திலெழுதிய வானரம்போல வாயை மூடிக்கொண்டு நிற்கின்றான். அருகிற் செல்கின்றேன். (சமீபித்து) ஆரிய ! நமஸ்காரம்.

விதூஷகன் :—மங்களமுண்டாகுக. (தனக்குள்) இத்துஷ்டச் சேடியைப்பார்த்ததும் இராஜ இரகசியமானது மனத்தைப் பிளந்துகொண்டு வெளிவருகின்றதே. (வெளிபாய்) நிபுணிகே ! சங்கீத வியாபாரத்தை விட்டு இவ்விடமெங்கு வந்தனை ?

நிபுணிகை :—தேவியினுடைய கட்டளையினால் உம்மைத்தான் பார்க்க வந்தேன்.

விதூஷகன் :—மகாராணி என்ன கட்டளையிடுகின்றாள் ?

நிபுணிகை :—தன்னிடத்தில் எப்பொழுதுந் தாங்கள் பிரியமாக விருந்தீர்களாம். தான் வருந்தினால் நீங்கள் சகிக்கமாட்டீர்களாம். இப்பொழுது மிகவுந் துக்கமடைந்திருக்குந் தன்னை அலட்சியஞ் செய்கின்றீர்களாம். இவ்வளவுதான் தேவி என்னிடஞ் சொல்லியது.

விதூஷகன் :—அவளுக்கு வருத்தமுண்டாக நமது மித்திரன் ஏதேனுஞ் செய்தனனோ ?

நிபுணிகை :—எவள் நிமித்தமாக உத்கண்டிதராய் அரசர் இருக்கின்றாரோ அவள் பெயரால் நம் மகாராணியை அழைத்தனராம்.

விதூஷகன் :—(தனக்குள்) என்னை ஆச்சரியம் ? நமது கனம் பொருந்திய மித்திரனாலேயே இரகசியம் வெளிப்பட்டதென்றால் நாம் ஏன் நாவை அடக்கிக்கொண்டு விசனமுற்றிருத்தல் வேண்டும். (வெளியாய்) என்ன ? 'ஊர்வசி' என்று அழைத்தனனோ ? ஆம். அத்தேவமாதைப் பார்த்த நாள் முதல் உன்மத்தங் கொண்டவராய் நம்மகாராணியை மாத்திரமன்றி, விநோதத்தி லிச்சையில்லாதவராய், என்னையும், வருத்துகின்றார்.

நிபுணிகை:—(தனக்குள்) அரசனுடைய இரகசியமாகிய கோட்டையை எனது உபாயத்தால் இடித்துவிட்டேன். (வெளியாய்) இப்பொழுது மகாராணியிடம் என்ன தெரியப்படுத்துகின்றது ?

விதூஷகன் :—நிபுணிகே! சாளைலக்கண்டு மயங்கியிருக்கும் மித்திரனைத் தெளியச்செய்து கொண்டிருக்கின்றேன். அது முடிந்த பின்னர்த் தான் தேவியினுடைய முகத்தைப் பார்ப்பேன் என்று போய்ச்சொல்.

[நிஷ்கிரமித்தல்.

நிபுணிகை :—உத்தரவுப்படி செய்யச் சித்தமாயிருக்கின்றேன்.

வைதாளிகன் :—(நேபத்தியத்துள்) தேவன் காக்கக்கடவன். (நேபத்தியத்திலிருந்தே பாடுதல்).

இரவியின் கிரண மிருளினை யொழிக்கு
  மியைபினை மானவே நுந்தம்
பொருவரு மொளியான் மாந்தரின் பயத்தைப்
  போக்கலி னவனைநீர் நிகர்ப்பீ
ரிரவிதான் தங்கும் வானக நாப்ப
  ணிறைப்பொழு தாதலி னீவிர்
பிரியமொ டுறைவீர் பகலத னுரும்
  பிரிவினி லின்புடன் மாதோ.

விதூஷகன் :—(செவிசாய்த்து) காரியாசனத்தினின்று நம்மித்திரன் எழுந்து இம்மார்க்கமே வருகின்றான். ஆதலின் இவ்விடம் போய் நிற்கின்றேன். [நிஷ்கிரமித்தல்.

பிரவேசகம் முற்றிற்று.

சருக்கை - இராமசாமி ஐயங்கார், பி. ஏ.

---

## இந்து ஜனசமூகச் சீர்திருத்தம்.

---

ஐயன் மீர்,

கற்றோர் பலர் நிறைந்த இக்கல்விக் கழகத்தின்கண்ணே நற்றமிழ்தேர் வல்லார் பலரிருக்க இற்றைக்கு நானிவ் விஷயத்தைக் குறித்து உபந்நியசிக்கத் துணிந்த தென்னையோ வெனின், நீவிர் இதுகாறும் கேட்டறியாத நூதன விசேடங்களை யெடுத்துரைக்க வல்லேன் யான் என்னும் இறுமாப்பினுலாவது இந்து ஜனசமூகச் சீர்திருத்த விஷயமாய் யான் கூறப்புகு மாற்றத்தைவிட ஏனையோர் யாவரேனும், சொன்னயம் பொருணயம் பொருந்தப் பிறருக்கு நற்பயன் பயக்கத்தக்க விதமாய் இவ்விஷயத்தைக் குறித்து உபந்நியசிக்க வல்லாரல்ல ரென்னும் துணிபினுலாவதன்று. ஆயின், மனிதர் வாழ்நாட்களில் அவரவர்க் குறூஉம் நன்மை தீமைகளோடு சம்பந்தப் பட்டியலுமாகையால் அதை ஐயந்திரிபற வறிந்ததற்கியைய நடத்தலாலே,

நந்தேச மனைத்தும் ஈடேறுதற் கேதுவாகிய இவ்விஷயத்தைக் குறித்து அவ்வவ் வமயங்களில், என் சிற்றறிவிற் கெட்டிய சில தோற்றங்களை நும் முன்னர் விரித்துரைப்பின் ஒரு வேளை பயன்படினும் படுமென்னும் கருத்தாற்றுணிந்து நின்றேன். இத்துணிவின் றிறனே, சென்னைக் கிறித்தவ கலாசாலைத் திராவிட பாஷாபிவிர்த்தினி சங்கக் காரியதரிசி உபந்நியசிக்கும்படி என்னைக் கேட்டுக்கொண்ட வளவிலேயே இசைவதற் கேதுவாய் நின்றது.

இது நிற்க, ஐந்து சொல் நான்கு சந்தியால் முடிந்து அனைத்தும் ஒரு பொருள் காட்டி நிற்கும் **இந்து ஜனசமூகச் சீர்திருத்தம்**, என்னும் சொற்றொடருள் முற்பகுதியாகிய **இந்து ஜனம்** என்னும் சொற்றொடர், வடக்கிற் பனிவரை முதற்றெற்கே குமரி பரியந்தம், மேற்கே சிந்து நதி, அரபிக் கடன் முதற் கிழக்கே குடாக்கடல் வரையிற் பரந்து கிடக்கும், இந்தியா என்னும் தேசத்தில் வசிப்பவர்களென்றும், வேதாகமபுராணக் கோட்பாட்டிற்கிசைய, உட்பிரிவு பலவாகித் தொன்று தொட்டிந் நாள்வரை நம்மவர் மனதில்வேரூன்றி உறுதி பெற்றிருக்கும்இந்து சமயத்தை யனுசரிக்கும் ஜனமென்றும், இருபொருள் பட்டுக்கிடக்கும். இவற்றில் முன்னதை யேற்புழிப் பற்பல காலங்களில், இந்தியாவின் வரம்பிற் கப்பாலுள்ள புறத்தேசங்களினின்று படையெடுத்து வந்து, ஈண்டுக் குடியேறி நிலைத்து இங்குள்ள சிலரையுந், தம்வசப்படுத்தி நிற்கும், மகம்மதியர்களையும், முன்னொரு காலத்திற் பாரசீக தேசத்தினின்றும், தங்கணாட்டரசன் கொடுங்கோன்மைக்குத் தப்புமாறு, இந்நாட்டில் அடைக்கலம் புகுந்து நிலைகொண்டிருக்கும், பாரசீகரையும் கருநிறமேகம் உயர்வரை பொழியச் சிறு பெருநதிகளா பொருங்கு சேர்ந்து பல்வேறு தேசங்களிற் பரந்து வந்து ஆங்காங்குள்ள குளம்பல நிரம்பி வளமுறப் பண்ணைவாய்ப் பாய்வது மன்றிப் பண்பிலாச் செய்களைப் பலன்றரச் செழிப்பித்து அலகி லுயிரோம்பு நற்புனற் பெருக்கெனப், பூலோகமெங்கும் புகாவிடமின்றி யெங்கும் பரந்து இழிந்தோரையும் உயர் வுறவேற்றும் கிறித்தவ மார்க்கத்திற்குட் பட்டாரையும், பார்ப்பனர் முன்ம்பாகத்தை முன்னிட்டுத் தீர்விலா உயிர்வதை செய்தன ராகையால், அன்னோர் செய்யும் அநியாயம் பொறுது, செம்மைசேர் அறந்தனைச் செய்வது வேண்டிற், கொல்லாவிரதமே கொள்ளத்பாலது என நல்லோர் புகழ்ந்திட நிர்வாணம் நிலை நாட்டிய புத்தரைப் பின்பற்றும் பௌத்த மதத்தினரையும் அம்மதக் கொள்கை பலசிதைந்து புறமதக் கொள்கை பலவிரவி அருகமதம் என மறுபேர் பூண்ட சைநசமயத்தை யநுசரிக்கும் சைநரையும் வேறு பல புறச்சமயத்தினரையும் உள்ளிட்டுப் பொருள்படுமாதலால், அப்பொருள் இவ்விஷயத்திற் கண்டோரைக்குறித்தல் பொருந்தாது. பிறிதொரு பொருளாகிய, இந்துமதத்தை யநுசரிக்கும் ஜன மென்பதை யேற்புழி, நம்மனோரை யொருவாறு குறிப்பினும், உற்று நோக்கின் அக்கருத்து இதற்கு முற்று மிசைந்ததாய்த் தோற்றவில்லை. என்னை? **இந்துமதம்** என்று ஒருமதம் இல்லை.

கிறிஸ்த்தவமதம் மகம்மதியமதம், என்பவைகள் முறையே, கிறிஸ்து, மகம்மது என்பவர்களா லேற்படுத்தப்பட்ட மதம் என்பதுபோல் இந்துமதம் என்பது அவ்வாறு கொள்ளற்பாலதன்று. இந்தியாவிலுள்ளோரால் அநுசரிக்கப்படும் மதமென்று புறதேயத்தினர் கொடுத்த பெயரேயன்றி வேறன்று தற்காலத்தில் அதுவும் பொருந்தாது, இந்தியாவிலுள்ளபெரும்பான்மையோர் அநுசரிக்கும் மதமெனில் ஒருவாறு பொருந்தும். அம்மதம் எத்தகைமைத்ததென வினவுவமேல், கிறிஸ்த்தவமதம், மகம்மதியமதம்முதலானவைகளைப் போலச்சுருக்கி விளக்குவதற் கெளிதன்று. ஏனெனில், இருளன், சாமுண்டி, சாத்தான், ஏகாத்தாள், மாரியாத்தாள் முதலிய பைசாசங்களையும், அகால மரணமடைந்தவர்களையும் தெய்வமாகப்பாவித்து அத்தேவுக்கள், உண்டுகளித்து உவப்புறுமாறு, மது மாமிசங்களைக்கொண்டு பூசித்து, உடுக்கையடித்து ஆவேசங் கொண்டு அத்தேவுக்களின் அநுக்கிரகம் பெற்றுக்கொள்ள முயலும் பேதை மாக்களும், பாம்பு, பல்லி, கருடன், கழுகு, பசு, எருது முதலிய ஊர்வன, பறப்பன, நடப்பன வாகிய அற்ப ஜந்துக்களை வணங்கி முத்திபெற முயலும் மூடபக்தியுள்ளோரும், திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளாகிய சிவபிரானை தந்தெய்வமெனக் கொண்டு, அவருக்கு விழாச்செய்து கொண்டாடிப் பூசிக்குமாறு மனைவிமக்கள் உண்டாக்கிப் பணியும் சைவர்களும், பாற்கடலில் அரவணைமேற்றுயில் கொள்ளும் பூவைப்பூவண்ணனாகிய திருமாலை தந்தெய்வமெனக்கொண்டு திருப்பதிதோறும் கால்கடுக்கச் சுற்றிப் பெருமாளைச் சேவித்துத்திரியும் வீரவைணவர்களும், இல்லறம் விட்டுத்துறவறம் புக்கு யோக நிலையிலும் யோகிகளும், அதன் பயனாகிய ஞானத்தைப் பெற்ற ஞானிகளும், இந்து மதத்தினரெனப்படுவார்கள். ஆயினும் மேலே குறிக்கப்பட்ட பலரும் தங்கடங்கள் தெய்வத்தைக் கொண்டாடும் பொழுது, சைவச்சின்னமாகிய விபூதியையாவது, வைணவச் சின்னமாகிய, திருமண், சந்தனம் முதலியவற்றையாவது கொள்ளுத லியற்கையாதலால், இந்துமதமென்பது, விபூதி, திருமண் முதலியவற்றை அணிந்து கொள்வார் அநுசரிக்கும் மதமெனப் பொருள்படும். ஆகவே இந்து ஜனமென்னில் நீற்றைப் புனைபவரும் திருமண்ணையணிபவரு மெனினுமமையும். இத்தகையோர் தக்க நாகரீகம் பெற்றுச் சீர்திருத்த மடைதலே இந்து ஜன சமூகச் சீர்திருத்த மென்பதாம்.

இந்து ஜன சமூகச்சீர்திருத்த மென்பது இவ்விந்து ஜனங்கள் சிற்சில விஷயங்களில் நாகரீக விருத்தி குன்றிக்கிடத்தலால் அக்குறைவை நிறைவு பெறச் செய்தல் எனப்பொருள்படும். இக்குறைவு உளதோ விலதோவென ஐயுற்றுப் பற்பலர் பல்வேறு அபிப்பிராயங் கொள்ளா நிற்கின்றனர். இவ்விந்தியாவிற் கலியின்கொடுமையால் நல்லோர் பெரியோரின்றிக் காலவரையால் வான்மாரி பொழியாது அஃக, விலை மிகுந்து மிகவும் துன்பத்திற் காளாமேனும் என்பார் ஒரு சாரார்; வேதாகம முறை மாறி வருணாச்சிரம

தருமங்கெட்டுப் புலையனும், வேதியனோடுறவாட நேரிட்டதென்பார் ஒருசாரார்; உலகமிருமாறு அநியாயமேலிட்டு ஐயாயிரப் புரட்டுண்டாகி அனைவரும் ஒன்றுசேர்ந்து பாவபுண்ணிய நிலையறியாது நரகத்திற் காளாய் நாசமுறுங் கால நேரிட்டதென்பார் ஒருசாரார்; உண்மையிலே சீரின்மையுள தேனும், அச்சீர்க் கேட்டைத்திருத்துந் திறனறியாரெனச் சீர்திருத்தச் சங்கத்தினர் மேற் குறைகூறுவார் ஒருசாரார். காலத்தாற் சீர்கேடுதானே மாறுமென்பார் மற்றொருசாரார். இவ்வாறு பல்லோர் பற்பல அபிப்பிராயங் கொள்வதென்னெனில் அவரவர் கொள்கை தங்கள்தங்கள் அறிவு விருத்தியினளவினதேயாம்.

"தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு".

என்றார் பெரியோராகலின் ஒரு விஷயத்தின் உண்மையை நன்காராய்ந்துணராதார் தங்கள் தங்களிட்டம் போனபடி அபிப்பிராயங் கொள்வதோர் வியப்பன்று. ஆயின் இன்னோர் கொள்கை தவறெனில் மற்றியார் கொள்கை உண்மையுடைத்து? என வினவுவமேல், ஒரு பொருளின் குணாகுணங்களை யாராய்ந்து அறியப்புகின் அப்பொருளின்கண் காய்தல் உவத்தலகற்றி, உள்ள குணத்தைத் தெரிந்து கொள்ளுந் திறனுடையார் அபிப்பிராயமே கொள்ளற்பாலது. இத்தகைய மாண்பினரே கற்றோராவர். இவரே,

"கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக"

என்னுந் திருக்குறளிற் கேற்பத் தாங்கள் கற்பனவற்றை ஐயந்திரிபறக் கற்றுப்பின்னர் அக்கல்வி யறிவிற்கிசைய அடங்கி நடப்பவர். ஏனையோர் கற்றோமெனச் சொல்லித் தங்கள் கல்வித்திறனைச் சுயகாரியநாடி, ஆதாயவிருத்திக்குபயோகப்படுத்தித் திரிவாராகையால் அன்னோரைக் கல்லாரெனக் கொள்ளுதல் குற்றமன்று. கற்றறிந்தாரென்பதைத் தங்கள் நன்னடக்கையாற், பிறரறிந்து பின்பற்றுமாறு போதிக்கமுயலாது,

"ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு".

என்னும் குறளில் மொழிந்துள்ளபடி, உருவத்தாலும் சொல்லாலும் செய்கையாலும் வஞ்சிக்கும் பரத்தையர் ஆலிங்கனமானது அவ்வஞ்சனையை யாராய்ந்து அறியும்திறனற்ற அறிவிலிகட்கு முன்னரினியதுபோலத்தோன்றிப் பின்னுயிரை யபகரித்தலால், அது காமவழியால் உயிரை யபகரிக்கின்ற மோகினி முதலாகிய தெய்வப் பெண்பற்றுதலாகுமென்பதை யறிந்தும், பலர் விலைகணிகையரிற்புக்கு அங்கவரோ டுல்லாச கீர்த்தனம் பாடுங்கால்,

"பொன்னை மாதனைப் பூமியை நாடிடேன்
என்னை நாடிய வென்னுயிர் நாதனே

உன்னை நாடுவ னுன்னருட் வெளி
தன்னை நாடுவன் றன்னந் தனியனே".

என்று தாயுமானவர் பாடிய வேதாந்தப்பாடல் பாடுபவரும்,

"பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண்".

என்ற குறட்பாவிற் கிணங்கப் பகையும், பாவமும், அச்சமும், பழியும் ஆகிய இந்நான்கும் பிறன்மனை விழைந்து அவளிடத்துச் செல்பவனை விட்டு நீங்காமையால் இருமை யின்பமும் அவன் இழப்பானென்பதை யறிந்திருந்தும், இதற்குச்சான்றாக, இராமாயணக் கதையை ஆதியோடந்தமாய்க் கேட்டிருந்தும், பிறன்மனை நயப்பவரும்,

"நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து"

என்பதற்கேற்பத் தன்னைக்கண்ட வளவிலேயே ஒருவன் மயக்குற்று வருந்தத்தக்க அழகினையுடையாளொருத்தி, இயற்கைப் பலங்கொண்டே பெதிரியை வெல்லத்தக்க வலிமையுடையான், வாளாயுதமுங்கொண்டு மாற்றான் மேற்செல்லலொத்து, குறிப்பு நோக்கையுந் துணையாகக்கொண்டு, வாலிபர் மனமும் கண்ணும் தன்மேல் வண்டெனப்பறந்து வீழச்செய்யும் திறனுலவளை வருத்துந் தன்மையும்,

"குறிக்கொண்டு நோக்காமை யல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போலநகும்".

என்னுங் குறட்கூற்றிற் கிணங்க, ஒருவனை நேரே குறியாகக்கொண்டு பாராதவளவல்லது, ஒரு கண்ணைச் சுருக்கினாற்போல் அவனைப்பார்த்து, பின்பு தனக்குள்ளே மகிழ்வுகாட்டி, அவன் மனதைச் சூறைகொள்ளுந் தன்மையும், ஆடல்பாடல் செய்யும் கணிகையர்களுக் கியற்கையென வறிந்திருந்தும் அக்கணிகையரைத் தமது வீட்டிலாடச்செய்து, நட்பினரோடு சூழவிருந்து அண்ணாந்து பார்த்திறுமாந்திருக்கும் ஏழைமாக்களும்,

"துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்".

என்னும் குறட்பாவிற்கிசைய, அறிவற்றிருப்பதனால், உறங்குபவர்கள் இறந்தவரின் வேறாகாமைபோல மதுபான முதலிய லாகிரி பதார்த்த மருந்துபவரும் நஞ்சுண்டிறப்பவரை யொப்பார் என்பதை நன்றாயறிந்தும், நாடோறுங் கள்ளுண்பவர் கதியை அனுபவத்திற் பார்த்திருந்தும் லாகிரி பதார்த்த மருந்தித் திரிவாரும்,

"சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்

இட்டார் பெரியோ ரிடாதார் ரிழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ளபடி".

என்னும் நல்வழி வெண்பாவிற் கண்டபடி, யோக்கியதையாலும், நடத்தையாலும், செய்கையாலும், மேலோர் கீழோராவதே யொழியப் பிறப்பினால் மனிதனுக்குக் கீழ்ச்சாதி மேற்சாதி வித்தியாசமில்லை யென்பதைத் தெரிந்தும், நல்லோராயினும் கீழ்ச்சாதியோ ரென்றிகழ்ந்து, அவர்கள் மரணத் தருவாயில் உதவியின்றிப் பரிதாப நிலையிலிருப்பினும், கீழ்ச்சாதியானைத் தீண்டவுங்கூடாதென்று ஈரமில்லா நெஞ்சத்தராய் விலகிப்போகும் மேற் சாதியார் எனச்சொல்லித் திரிபவரும்,

"குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சளழகும் அழகல்ல—நெஞ்சத்துள்
நல்லம்யா மென்னும் நடுவு நிலைமையாற்
கல்வியழகே யழகு".

என்றநாலடிக் கருத்தின்படி, மேனி மினுக்கிக் கண்டவர் கண்ணைக் கவரத் தக்க விதமாய், நீர்கொண்ட மேகம்போற் கறுத்து நீண்ட கூந்தலும், விலையுயர்ந்த ஆடைகளும், மஞ்சள், புனுகு, சவ்வாது முதலிய பூசிக்கொள்ளத் தக்க வாசனைத் திரவியங்களும், புறத்தே அழகுபெறச்செய்விப்பினும் (ஆண்களுக்கு "நல்லறிவு எல்லாச் சிறப்புங்கரும்" என்றுராகையால், அவ்வறிவிற்கு முதற் காரணமாகிய கல்வி அகத்தழகினுமாறு), பெண்களுக்கும் அக்கல்வியே உண்மையழகைத் தரத்தக்கதாகையால், மேற்கூறிய புறவழகு பயன்படா தென்பதை யறிந்தும் பெண்கல்விக்கு விரோதஞ்செய்யும் பேதைமாக்களும், பிள்ளைகளறியாத பாலியவயதில் தகப்பன் பிதிரார்ஜிதத்தை வீண் விரயஞ்செய்தானாகையால், அத்தந்தை கடனுக்குச் சிறுவர் பாத்தியராகாரென, நியாயாதிபதிமுன் வழக்கிட்டுக் கட்சிபேசுபவராயினும் தன்மக்களுக்கு அறியாவயதில் மணமியற்றிச் சாத்திர முறைப்படி செய்தோ மென்னுங் குதர்க்கவாதிகளும் ஆங்கிலரோடு ஒக்க நடத்தப்பட வேண்டு மென்று இராஜாங்கத்தாரோடு வாதாடுபவராயினும் பள்ளர் பறையர் முதலிய எளிய சாதிகளைத் தாம் வசிக்கும் தெருவிலேயும் நடக்கச் சகியாத அமைச்சர் மதித்திறன் மிக்காரும், தாங்கள் தாழ்ந்த நடையினரா௪ய்த் தண்டேன்றி, கூன்முதுகோடு தவழுங் காலத்து, மனையாளிறப்பிற் பிறிதொரு விவாகம் செய்ய முயன்றாலும், கருத்தறியாப் பிராயத்திற் சிறுமிகளுக்குப் பதுமை விவாகம்போல் மணமியற்றி, அவர்கள் தாங்கள் நன்றாய்ப் பார்த்து மறியாத கணவர்களிறப்பின், சாந்தனையும் கைம்பெண்ணாகவே யிருக்கவேண்டு மென்று விதவாவிவாகத்திற்கு விரோதஞ் செய்து, சுயகாரியம் நாடிப் பெண் கேடு சூழ்பவரும், ஆகிய இவ்வியல் பினரைக்கற்றோர் என்பதெங்ஙனம்? வறுமையும், பழியும், பாவமும் தருமவைகளைக் கைக்கொண்டு, செல்வ

மும் புகழும் அறமுந்தரும் வைகளைக் கைவிட்டுத்தானே தன்னிருமைப் பயன்களையுங் கெடுத்துக்கொள்ளுதலேபேதைமை யென்னுங்கருத்தமைந்த

"பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்"

என்றும் குறட் கூற்றுக்கேற்ப, கல்விப்பெருக்கத்தா லுண்டாகும் உண்மை யூதியம் கைவிடுத்துப் பாவத்தொழில் பூண்டொழுகுமிவரைக்கற்றுரென்னல், மொட்டைத் தலைச்சியைக் கூந்தலழகி யென்று விளித்தலொக்கும். ஆகவே சற்றும், கல்லாராகிய இவர்வாய்ச் சொல், நாம் கொள்ளாது, கற்றுணர்ந்தார் கூறும் விழுமிய பொருளை அங்கிகரித்து ஆராய்ந்தறிந்து தன்னுயிரோடு மன்னுயிரும் இகபர சாதகமெய்துமாறு நன்மையைப் பயத்தலே பேரறிவின் பயனுதலால் இற்றைக்குயான் நம்முன்னர், இவ்விந்து ஜன சமூகச் சீர்திருத்தம் விருத்தியின்றிப் பண்டுள்ள நிலையிலே, நீடித்து நிலைத்ததெக் காரணம்பற்றி யென்பதை, விழுமியோர் கூற்றிற்கேற்ப விளம்பலுற்றேன். ஏனெனில், நந்தேசத்தின் தற்கால நிலைமையை, நாகரீகத்தில் மிகப்பெருகி அதன் பயனுக எண்ணுதற்கரிய நற்பேறுகள் பலபெற்றுள்ள பிறதேசங்களின் நிலைமையோ டொப்பிடுவமேல், ஆதவன் முன்னர் ஒளிமழுங்கிக் கிடக்கும் அம்புலி போற் பெருமையிழந்து, மாரிநாட் கார்முகில் வேனிற் காலத்து வெண்முகிலானு லொத்து, ஐம்பெரு நிலமுந் தனித்தனி ஈனும் ஐம்பெரு நிதியுங்குன்றி வேட்டை வாய்க்கிட்டும், உயிரிணைச் சுணங்கன் பலவந்து சூழ்ந்திடு மாறுபோல் அரேபியர், மொகலாயர் பின்னர் ஐரோப்பியராகிய பலர்வந்து இடம் பெறலுற்று மகிமை குன்றிக் கிடக்கும் இந்நாவலந் தீவானது, நாகரீகக்குறைவால், நற்பயன் பெருது நாளுக்கு நாட் கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரனைப்போற் பின்வாங்கி நிற்கும் நிலைமை யாவருக்கும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குமே. நந்தேசமிவ்வாறிழிந்து கிடப்பதற்கேது வென்னெனில், இதற்கோர் மூலகாரணமாகிய முதற்காரணமும் அதனினம்பற்றிவந்த பல்வேறு காரணங்களு முண்டு. முதற்காரண மாவதியாது? உவர்க்கட லாடையாயுடுத்திடு புவியின்கண் சொற்பல பேசும் பற்பலதேயம் பரவிக்கிடப்பினும், எந்தேய மன்றி இனியொரு தேயத்தில், தொன்று தொட்டின்றளவும் கனவளவேனுங் கண்டறியப்பெறுத, சாதி வேற்றுமையும் இதினின்றும் விளைந்து இதற்குபகாரணங்களான பலவற்றுளு முக்கிய மானவைகளான, பாலிகாவிவாகம், கைம்பெண்கள் புனர்விவாக மின்றி யிருத்தல், பெண்கல்வி விருத்தியாகாமை, ஆடவர் கணிகையரை விழைதல், ஆடம்பரச் செலவு முதலியவைகளேயாம் என்றுலும், சாதிவேற்றுமையைப்பற்றி விவரிக்கப் புகுங்கால் இடையிடையே அதன் பயனுகிய மற்றுள்ள தீமைகளும் விவரிக்கப்படும்.

(இன்னும் வரும்.)

சா. சோமசுந்தரம் பிள்ளை, பி. ஏ.

# சீவக சிந்தாமணி வசனம்.

---

## விநாயகவணக்கம்.

### நேரிசை வெண்பா.

சிந்தா மணிக்குமேற் செவ்வனுறு திப்பொருட்கோர்
சிந்தா மணியாஞ்சிந் தாமணியென் - சிந்தா
மணித்தந் திதுதிக்கை வைத்தொளிரச் செய்யு
மணித்தந் திதுதிக்கின் வாய்.

## செந்தமிழ்ப் பரமாசாரிய வணக்கம்.

### குறள் வெண்பா.

திருத்தக்கா னூல்வசனந் தெள்ளமிர்திற் செய்ம்மா
திருத்தக்கான் மெய்ப்பதமே சேர்.

## காவியக்காப்பு.

### கலிநிலைத் துறை.

மூவா முதலா வுலகம்மொரு மூன்று மேத்தத்
தாவா தவின்பந் தலையாயது தன்னி னெய்தி
யோவா துநின்ற குணத்தொண்ணிதிச் செல்வ னென்ப
தேவா திதேவ னவன்சேவடி சேர்து மன்றே.

---

## அவையடக்கம்.

கல்வின் பகுதியவாய இரத்தினங்க ளியாவும் மணிநூல் வல்ல வேகடியாற் கழுவப் படாவாயின் அவையிற்றி னன்மை கெடும். அங்ஙனே நிறைமதியன்ன கலைக ணிரந்த சொல்லின் பகுதிய பெற்ற மறுவும், புலமை மிக்க சான்றோர் தம்மறிவுநீராற் கழூஉ வழகாக வமைத்து நன்மை குன்றாமே வைப்பார் என்னுந் துணிபானும், முத்துப்பவளம் சங்கு என்பன உவர்ப்பையுடைய கடற்கட் டோன்றினும், குணமறிந்த விழுமியோர் அவையிற்றைக் கைவிடாது சீரியவாக் கொள்ப. அதுபோல மெய்யாகிய புரா்ணப் பொருளாலே சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத் தாய அந்தமி லின்பத் தழிவில் வீடாம் முத்திப் பேற்றை யடைதுமென் றிருப்பார், எனது உவர்க்குந் தன்மையை யுடைய சொற்கள் விழுமிய. வல்ல வாயினும், அவை பொதி பொருளுடைமை நோக்கி நல்லவாக் கொள்வரெனு முறுதியினானும், திருத்தக்க தேவனாஞ் செந்நாப் புலவ னிபற்றிய சிந்தாமணிப் பாற்கடலை மதித்துச் செந்தமிழ் பயில்வார் வாய்த் தேக்கற் குரிய அமிர்த சாரத்தைத் திரட்டுபு தொகை விரியின் வசனநடையின் வைத்தனன்.

நோய்க்குற்ற மாந்தர் மருந்தின்சுவை நோக்க கில்லார்
தீக்குற்ற காத லுடையார்புகைத் தீமை நோக்கார்
போய்க்குற்ற மூன்று மறுத்தான்புகழ் கூறு வேற்கென்
வாய்க்குற்ற சொல்லின் வழுவும்வழு வல்ல வன்றே.

அவையடக்கம் முற்றிற்று.

---

## நாமகளிலம்பகம்.

### நாட்டு வளம்.

உலக மாகிய வொருபெரு நங்கையின் றெய்வ மங்கல வணிகலன் றிகழுங் கந்தர மன்ன பரத கண்டத்திலே, மேலாய் விளங்குந் திருமுகம் போல்வதும், நாவுறையும் புலமகளாகிய கலைமகளும், பூவதி தலைமடந்தையாந் திருமடந்தையுந் தன்னை நீங்காமே நின்று தழுவ, அமிழ்தினு மினிய பாக்கள் பெருமையோடு விளங்கும் கலைகளிலே தட்டற நடந்த கேள்வி வேந்து அரசுவீற் றிருப்பதும், காயினின்றும் முதிர்ந்த தெங்கு கனி வீழ்த்த, அவை கமுகிற் றாக்கி வீழலானே தேன்றாறு கிழிந்து, பலவின்பழம் போழ்ந்து, தேமாங்கனி சிந்தி, அரம்பைப் பயங்கள் சிந்தும் அணிவள னடுத்ததும், புகழாற் றிக்கெங்கும் போயதும், நாவலர் நவின்ற நாட்டியலுட் சிறந்த ஏமத்தை யங்கதமாக்கொண் டிலகுவதும், இன்னோரன்ன பல சிறப்புக்களை யுடையதும் ஆகிய ஏமாங்கதம் எனப் பெயரிய நாடொன்றுளது.

அந்நன் னாட்டகத்தே திண்டோள் வல்ல சீவகசாமியின் களிற்றின நேரக் கருவிமா முகிலினம் பரவை மேய்ந்து, பொன் மயக்கொன்றைத் தார்புனைந் தருளுஞ் சின்மயப் பரம்பொருளா மென்னை யாளுடை பெண்குண விறைபவன் றன்சடைபோன் மின்னி, மலைசேர்ந்து, விண்ணிவர்ந்து, வாய்விட்டு முழங்கி, ஒன்றுகூடி, ஆகாயத் தண்டூற வெள்ளிக்கோல்களை வரிசையினடுக்கி மலையினுச்சிக்கண் வைத்தாற்போல மழை பொழிந்தன. அவ்வேந்தறன் முழவுபோன் முழங்குமலையின் குவட்டினின்று மிழிபு மருவித்திரளும், பிறைக்கோட்டாற் றசர்க்கப்பட் டிறங்குந் தேன்றிரளும், திரண்மாடக்கட் செறிந்த வெண்டுகில் செந்துகிற் கொடிகளே போலத் தோன்றும். அங்ஙன மிந்திரனகலத் தாரம்போல் வீழும் அருவி வெள்ளமானது வரையாது கொடுக்குங் கரதலமுடைய நன்மக்களைப்போல மிதித்திரள், சந்தனம், அகில், பழமுதலிய ஆங்குள்ள வளங்களை யெல்லாம் ஊர்க்கணிருந்த நல்குரவார்க் குய்ப்பானெண்ணி வாரிமடுத்து, முகங்கொண்டு, தென்னையிலைபோலப் பரந்து, நாட்டைநண்ணி, வாய்க்கால்கடேங்க வோடிற்று. அதுகாலை நாட்டிலுள்ளாரெவரும் மிக்க குரலையுடைய பறையினாற் சேணிற் பயன்விரித்துப் படலிடுவா மொய்த்தனர். அவர்ஃதிட்ட

மையான் வேட்டையிற்பட்ட வேழம்போலத் தணிந்து சென்றவெலற்கருந் தீம்புனல், குலமகளிர் சற்பதேபோலக் கோட்டகம், ஏரி, செய், வயன்முதலியவற்றிற் குலவிநிறைந்தது. புரப்பவர் தோற்றத்தையு மிரப்பவர் சுற்றத்தையுந் தந்தொழி லொன்றுமே விளைத்துக்காக்கு மேழியந்திருவார், ஒன்றுக்கொன்று பிந்தாத மாமனையு மருகனையும்போன்ற வன்பினையுடையனவும், காமனையும் அவன்றம்பி சாமனையும் புரையுஞ் சாட்சியனவும், பூவும் அரிசிப் புல்லுந்தின்ற வயிற்றனவும், தந்தொழிலின் மிக்கனவும் ஆகிய தெறித்த கொம்பனையுடைய எருமைக் கடாக்களையும் எருத்தினங்களையும் பூட்டி, வரான்மீன் கூட்டங்க ளிரிய வுழுவாரளவிலர். அது முற்றியபின் அவர் தந்தாயதுசேறுசெய்த வயலிடங்கடோறும் நெல்விதைப்பாரும், செவ்விய நாற்றைக் கடைசியர் குழுவொடு நடுவாருமாயினர்.

நடுவார்தம் பேரோசையைக் கார்காலஞ் செய்வான் வந்த மங்குன் முழக்கென்று மயில்க ளேங்கிபாட, அவ்வொலியை முன்னர் மழையோவென் றயிர்த்தயர்ந்த குயிலினங்க ளுண்மையென்று வெரீஇ யலமந்து காதலர்ப்பிரிந்த கற்புடை மகளிர்போலக் காவகத்தொடுங்கின. பின்னர்க் களைகட்டல் செய்தாருட் கடையராவார் மதுவார்ந்த களியானே தாமரைகுவளை முதலியனவற்றைத் தத்த முழுவலன்புடைத் துணைவியருறுப்பென மயங்கி விடுத்து அத்தொழின்முடித்து, முத்துப்பந்தன்ன கருவுயிர்த்துப் பாதிரிப் பூவையுங் கெடுத்த நாவினையுடைய நத்தைகொண்டு நாரைமீதோச்ச, அப்பக்கி யதுதிரையென்று மெல்லவெழுந்து மேலாலும். இன்னனவாய வேண்டுவினை முடித்த மழவரோம்பிய,

> சோல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன்
> மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
> செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
> சல்விதேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.

மீனின் விழியளவாயினும் வெறுநில மின்மையானே புவியினர் கண்டு புகழ்தற்கரிதாய், மேலவர்கண்டு மெச்சுதற் குரித்தாய வயல்கடோறும் நிறைந்த கருப்பங்காடுகளும், சிந்துர நின்றுலு மறைக்குஞ் செந்நெற்பயிர்களும் முற்றினமையானே யொல்லென்னு மொலியவாயின. அதுகண்ட மண்மகள் புதல்வரார் முண்மையின் மிக்கார் பிறைபோலுங் கொடுங்குயத்தை வலக்கை பற்றிச் செந்நெற்காடொடு முன்களைபறியாதனவற்றையுங் களிப்போடரிந்து குவித்துக் களமேற்ற, மேகங்களின் செலவையுந் தடுத்தோங்கிப் பக்கத்தகன்றுகாணும் நெற்கூடுக ளிருக்கப்பெற்ற அக்களநிலம், இப்போரையும் பொறுக்ககில்லேனென வாய்விட்டரற்றன்மானப் பொலியெழுந்தது. நெற்பொலி விண்காறும் போய்க் குன்றெனப் பொலிந்தது. உலோபரை வருத்திப்பொருள் வாங்கி வழங்கும் புண்ணியர்போலக் கணுவுடைக் கரும்பைத்

துண்டித்து ஆலையிலிட்டு நசுக்கிப்பிழிந்து, அடைந்தார் பருகி விஞ்சிய சாற்றை யடுதலா லுண்டாகும் புகைபரந்து மேற் சேறலிற் பரிதி சிவந்தது. உழவர் களத்தே தூற்றிக் குவைத்த நெல்லுட் டிணைப் பொருநரது வறுமை நீங்கக் கொடுத்தன போக எஞ்சியவற்றை விற்றற்கும் வைத்தற்குங் காரணமாம் பண்டிகளும், சர்க்கரைப் பாகுநிறை பண்டியும், மலர் இளநீர் வெற்றிலை பாக்குக்குலை குழையும் பழம், "ஓர்க்கோலை சங்கமொளிர் பவளம் வெண்முத்த-நீர்ப்படு முப்பினோ" டைந்தாய கடல் வளம் பொதுளிய பண்டிகளும், ஈரெண் கூலமு நிரப்பிய சகடங்களும், ஒழிந்த பண்டங்க ணிறைந்த பண்டிகளுமாகத் திசையெங்கு நிறைந்து நாடொறு மித்தன்மைத்தாய் விளங்குவன மருதம் வீற்றிருக்குமவ் வயலிடங்களே. யானிவிக் கூறுதற்கு நின்றன குடியிருப்பூர்களே.

அவ்வூர்க்க ணுள்ள மூங்கினட்ட குவளைமலர் நெருங்கிய ஓடைகளிலே நீர்வற்றலாற் சிறிது வாடிய வள்ளைக் கொடிமீது வாளை மீன்கள் பாய்தல், கழைக் கூத்தியர் மூங்கிற் கம்பத்தினின்று மிறங்கிப் பக்கத்தி னமைந்த கயிற்றிற் குதித்து ஆபரண மொலிக்க ஆடுவ தொக்கும். கரையிலிருந்த நாரைகள் அக்கூத்தைக் காண்பவர் போன்றன. வாவியின்கட் புகுந்து விளையாடும் மகளிரது கலைவடங்க ளற்றுதிர வெடுப்பாரின்றிக் கிடந்தமைபால், அவ்வாவிகள் யாவும் மேகலை யணிந்து, ஆகாய நட்சத்திரத்தைப் பூத்தது போலும். செல்வச் செருக்கினாற் பலர் ஆட்டுக் கடாக்களையும், தோணியினின்றும் வந்த குட்டுடைக் கோழி முதலா வுள்ளவற்றையும், காடையாதிய சேவல்களையும் வகுத்து வைத்து, அவை புண்ணுடையனவாயிருத்தலையும் நினையாராய்ப் பின்னரும் போரை விரும்பி மூட்டி யார்க்கும் ஓதையும், விலக்குங் கௌவையுமே யவ்விடத்திற் காடவாரமாம். யாவரையும் நீக்கா துணவருத்தும் அன்னசாலையும், வைகறை யறலிற் பூவுஞ் சந்தனமு மிட்டு வைத்திருக்குந் தண்ணீர்ப் பந்தரும், கூத்தாடரங்கு மிவையன்றி ஐம்பொறிபா னுகர்தற் குரிய பொருள்கள் யாவும் ஆங்காங்கு நிறைந்து ததும்பாநிற்கும். அவ்வூர்களிற் சத்திரமு மாயிரம்; தருமத்திற்கு விட்ட வரியிலா நிலங்களும் ஆயிரம், ஓதுஞ்சாலைகளு மாயிரம்; மகளிர் கோலஞ் செய்யு மிடமு மாயிரம்; தொழிலின் மடியாத கம்மியர்களு மாயிரம்; கல்யாணமும் ஆயிரம்; ஊர்ப்பாதுகாப்பாரும் ஆயிரமாம். சிறப்பெவற்றிற்கு மிடமா இந்நாடே யென்ப.

நற்ற வஞ்செய் வர்க்கிடந் தவஞ்செய் வார்க்கு மஃதிடம்
நற்பொ ருள்செய் வார்க்கிடம் பொருள்செய் வார்க்கு மஃதிடம்
வெற்ற வின்பம் விழைவிப்பான் விண்ணு வந்து வீழ்ந்தென
மற்றை நாடு வட்ட மாக வைகு மற்ற நாடரோ.

(இன்னும் வரும்.)

நா. கதிரைவேற் பிள்ளை.

---

# ஸ்ரீராமாநுஜாசாரிய சரிதம்.

பின்பு சூரியன், இராமநுசனெனுந் திவாகரனது புகழ்பரவிச் சென்று தனதொளியினைத் தகைக்குங் கொல்லோ? என்றையுற்று மற்றை நாட்களினு மற்றை நாளில் ஒளிமிகுந்து குணதிசைக் குன்றை யொன்றியவளவில், காமமாகிய காட்டை யழித்து வஞ்சனை என்னும் வேரைப்பறித்துப் பொய்யாகிய புதரை யெரித்துக் கடினமாகிய கரம்பு திருத்தி உண்மையாகிய எருவிட்டு நெஞ்சமாகியவயலில் தெய்வபக்தியாகிய விதை விதைத்துப் பக்குவமாகிய நீர்பாய்ச்சி விஷயமாகிய பட்டிமேயா வண்ணம் சாந்தமாகிய வேலி யமைத்துப் பிரமஞானமாகிய பயிர்தழைக்கக் கருணையாகிய கதிர் தோன்றி நிற்க அதனை* "யெட்டினோடி ரண்டெனுங் கயிற்றினால்" பிணித்து முதிர்ச்சி யென்னுங் களங்கொண்டுசென்று முத்தியாகிய முழுப்பயன் வாய்க்கப்பெற்றவர்களாகிய நம் யமுனைத் துறைவரது சீடர்கள் யாவருந்திரளாக இருந்து பெரிய நம்பிகளுடனே 'வைணவ சமயத்தினை நிலைநிறுத்துவார் எவரோ?' என்றுகேட்க, அவரும், 'ஸ்ரீஆளவந்தார் பெரிதும் கடைக்கணித்தருளியதும், அவரது திருவிரல்கள் நிமிர்ந்ததும் உங்கள் திருவுள்ளத்தில் நிலையிட வில்லையோ? என்றனர். அதுகேட்ட அம்முதலிகள் பெரியநம்பிகளை நோக்கித் 'தேவரீர் மீட்டுமொருகால் கச்சிநகர் சென்று இளையாழ்வாரைத் திரும்பக் கொணர வேண்டும்' என்ன அவருமுடனே புறப்பட்டுச்சென்ற காலத்தில், இளையாழ்வாரும் பேரருளாளர் தமக்குத் திருக்கச்சிநம்பி முகமாய் நியமித்தபடி அப்பெரிய நம்பிகளை யாசிரியராகப் பெறவெண்ணித் திருவரங்கம் பெரிய கோயில் நோக்கிச் செல்கையில் மதுராந்தகத்தில் இருவரும் வந்திறங்கினார்கள்.

இங்ஙனமாக, பெரிய நம்பிகள் ஆங்கெழுந்தருளிய ஏரிகாத்த பெருமாளைச் சேவிக்கக் கருதிச் செல்ல அவரை இளையாழ்வாரும் தூரத்திற் கண்ணுற்றுத் துயர்க்கடலினீங்கி ஆனந்தக்கடலிலாழ்ந்து, எண்ணியபலன் எதிர்ந்து வந்ததே! என்று உடல்புளகிக்க, ஆனந்தக் கண்ணீர் சொரிய நம்பிபாற்குறுகி வணங்க, அவருமிவரை யெடுத்தணைத்து உச்சிமோந்து நின்றவளவிலே, இளையாழ்வார், 'இப்பொழுதே யடியேனுக்கு இதோபதேசஞ் செய்தருளல் வேண்டு'மென்ன அவர், 'கடலாடை சூழ்ந்த நிலமாமகளது முகமோ? திலதமோ? கண்ணோ? எனக்கவிஞர் கருத்தைக் கவரத்தக்கதும்; 'தேவலோகமும் இதன் அழகிற்குத் தோற்றுவானத்தில் மறைந்ததோ'! என்றையுறத்தக்கதும்; பேரருளாளன் முதலிய பதினெண்மர் பாங்காயுறையத்தக்க பண்புடையதும்; காமாக்ஷியம்மையும் கருத்தியைந்து தரித்திருக்குமாறு கவினைப் பெற்றதும்; எத்தகைய தீவினையோரையும் முத்தராக்

* திருச்சந்த விருத்தம்.

கத்தக்கதும்; பிரமதேவனது படைத்தற் றொழிலின் சிறப்புணர உதாரணமாயதும்; பலபடி பன்னியுரைத்தலாற் பயனென்! 'முத்தொழில்களையும் ஆற்றுதலானும், முத்தியானு மளித்தலானும் எல்லையிலா நீரினானும் யான் திருமாலுக்கு ஒப்பாவேன்' எனத்தக்கதும், இனி, இன்ன பொருளுண்டோ? என்றுகேட்கும் கேள்விகட்கிடனின்றி யெவ்வெப் பொருள்களும் எந்நாளும் மலிந்திருக்கப் பெற்றதும்; இடையறாமல் அதிர்க்கும் பேரிகைகளின் பேரொலியால் உதிர்ந்த பெரிய நட்சத்திரங்களைப் போன்ற சங்கிலியாற் கட்டப்படும் வலிய யானைகளுலாவுஞ் செம்பொன்சோதி வீதிகளை யுடையதும்; இரவியின் புரவி செல்லாவண்ண மோங்கி யவ்விரவியை, உத்தராயணமாச் செலுத்துவதும், ஒருகால் அத்தகைய புரவியுஞ் சற்றுத் தங்கியிளைப் பாறவோங்கிய சோலைகளையுடையதும்; தன் புகழே திரண்டு விண்மதியாய் விளங்கப்பெற்றும், 'செம் பொன்னாலாகிய மாடமாளிகைகளின் உபரிகைக்கணுள்ளமாதர்கள் பாடும் பாட்டால் வெட்கமடைந்து தம்புரு முதலோர் தேவலோகத் தொளித் தார்களோ! எனத் தக்கவுயர்வு பெற்றதும்; அத்துணை மாதர்கள் கூந்தலிற்கு ஊட்டும் அகிற்புகை சென்று கடலினை நீல நிறமாக்கியது மான காஞ்சீ நகரத்து அத்திகிரியிற் புண்ணிய கோடிவிமானத்தே "*அயர்வறும மரர்களதி பதி" யாகிய பேரருளானது ஸந்நிதியில் உபதேசிக்கின்றேமென்றார்.

அது கேட்ட நம் இராமாநுஜர்†, சரீரம் மின்னலைப்போலத் தோன்றிய பொழுதே அழியுமாதலின், ஒரு கணமேனும் தாமதியாது ஈண்டேயருள் செய்ய வேண்டு' மென்ன அவரும் அங்ஙனே யுபதேசித்து, 'இராமன், நாட்டை ஆளுதற்காக ஸ்ரீபாதாழ்வான் முடியிலே தன் திருவடிகளை வைத்துக் காட்டுக்குச் சென்றவாறு, யமுனைத் துறைவரும் நமக்காகத் தமது அடிக்கமலங்களை என்றலையின்மீதிருத்தித் திருநாடடைந்தனர் என்றெண்ணக்கடவீர் என்று இளையாழ்வாரைத் தேற்றினர். [ஆனதுபற்றி நம்யமுனைத் துறைவர் இளையாழ்வாருக்கு நேரேயாசிரியராமாறுகாண்க. இதுபற்றியே †"யதிகட்கிறைவன் யமுனைத்துறைவனிணையடியாங் கதிபெற்றுடைய விராமாநுசன்" என்று **பிள்ளையமுதனாரும்** அருளிச் செய்தது].

பின் அவ்விருவரும் தமக்குள் மகிழ்ந்து பெருமாள் கோயிற்கண் ஏக, ஆங்கெழுந்தருளிய திருக்கச்சி நம்பியும் எதிர்கொண்டு போந்து நம்பெரிய நம்பியைத் தண்டனிட, அவருமிவரைக்கடைக் கணித்தனர். இவ்வாறாக;

அப்பால் இளையாழ்வார் தம்மில்லஞ்சென்று ஆங்கே பெரிய நம்பிகட்கும் இடம் அமைத்து அவர்க்கு வேண்டுவனயாவுமீந்து உபசரிக்க நம்பிகளும் ஆறுமாதம் எழுந்தருளியிருந்து இராமாநுஜருக்குச்சமயக்கோட் பாட்டுநூல் முதலிய யாவற்றையும் பயிற்றினர். இங்ஙனம் நிகழ்கையில், ஒருநாள்

* திருவாய்மொழி. † இராமாநுசநூற்றந்தாதி.

சில வைணவர்கள் இளையாழ்வாரை நோக்கிப் பசி எம்மைவருத்துன்றது' என்றவாறே அவரும் தமதில்லாளைக் கூப் 'அன்னமில்லையோ!?' என்ன, அம் மனையாளும் 'சுன்னம்' எனக்கேட்டுத் தம்மனதிற் பின்னங்கொண்டு, அம் மனைக்கிழத்தியை வேறொரு காரியத்திலேவித் தாமே அட்டிலிற் சென்று ஆராய்கையில் ஆங்குப் பழைய சோறிருக்கக் கண்ணுற்றுக் கடுஞ்சீற்றமுடையராய், மனையாளைநோக்கி *"இடும்பையாலடர்ப் புண்டிடுமிதோ துற்றென் றிரந்தவர்க்கில்லையேயென்று - நெடுஞ்செலான் மறுத்த நீசை" என்றனர்.

இத்தனையோடமை யாமல், மீட்டு மொருநாள் கிணற்றங்கரையில் இவ் விளையாழ்வார் மனையாளும், பெரியநம்பியின் மனையாளுமோர் தோண்டிகாணமாகத் தமக்குள் மாறுபட்டுப் பேசியதைப் பெரியநம்பிகள் கேட்டருளித் தம் தேவியைக் கோபித்து அதனை இளையாழ்வார்க்கும் அறிவியாது தேவிசனையும் கோயிலுக் கழைத்துச் சென்றார். பின், நீராடச்சென்ற இராமாநுஜர் மீண்டு தமது மாளிகை வந்ததும் ஆங்குப் பெரிய நம்பிகளைக் காணப் பெருமையால் அருகிலுள்ளாரைக் கேட்க அவர்களும் நிகழ்ந்த செய்தியாவுங் கூறக்கேட்டுத் தம்தேவியை வெறுத்துப் பிறந்தகமே போக்கித் தாமும் † "இல்லற மில்லேல் துறவு" என்கிறபடியே இல்லறம் நீக்கித் துறவறம் கொள்ளக் கருதி அனந்த ஸரஸில் மூழ்கியப்பாற் பேரருளாளரது கோயிற்கணெழுந்தருளித்,

‡ "தாயே தந்தையென்றுந் தாரமேகிளைமக்களென்றுந்நோயே பட்டொழிந்தேன்" என்றிவ்வாறுரைத்து அப்பெருமானையே ஆசிரியனாகக்கொண்டு வேண்டா நிற்புழி அருளாளனு முள்ளமுவந்து அர்ச்சகர்முகமாய்த் திரிதண்ட முதலியவற்றையும் ஈந்தருளி, § 'நம் இராமாநுஜனை மடத்திலிருத்தி வாருமெனத்திருக்கச்சி நம்பிகட்கு அருளிச் செய்ய அவருமங்ஙனே செய்தனர்.

அதன் பின்னர் நம் இராமாநுஜரும், துறவறத்தைக் குறைவற நடாத்துங்காலத்து, ஸ்ரீயமுனைத்துறைவரது திருவுள்ளக் கருத்து நிறைவேறுமாறு நமக்குத் துணைபுரிவா ரெவருளரோ! எனக்கவன்று 'கோவிந்தபட்டன்' என்பானை நினைந்து 'அவனே நமக்கு நன்மை புரியுந்தகைமையன்', 'விஷயப்பற்றினை வெறுத்தவன்', 'சாத்திரத்தை நம்புந்தன்மையன்' இனி, அவனை நம்முடன் சேர்க்கவல்லா ருண்டாகிலன்றோ நலமாவது' 'இதனைத் தலைக்கட்டுபவர் பெரிய திருமலைநம்பிகளே' எனத்துணிவு கொண்டு அவர் பக்கல் ஒரு வைணவரை நோக்கித் தேவருடைய மருமகனான வட்டமணிக் கோவிந்தபட்டர் அடியேனுடன் கல்விபயின்ற, ஒரு சாலைமாணாக்

* திருமொழி. † இயற்பா. ‡ பெரியதிருமொழி.

§ இவர்க்கு 'இராமாநுஜர்' என்ற திருநாமமும் அப்பேரருளாளனுலளிக்கப்பட்ட தென்க.

கன், ஏதோ சேர்க்கை வேறுபாட்டாற் காளஹஸ்தியாகிற கடுங்காட்டில் திரிந்துழலாநின்ருன். தேவரீர் அவனை அடியேன் பொருட்டாகச் சற்கருணை கொண்டு திருவடிக்காட் செய்யவேண்டும்" எனக் கூறுமாறனுப்பினர். இஃதிங்ஙனமாக.

(இன்னும் வரும்)

தி. கோ. ஸ்ரீரங்கா சாரியர்.

---

# திருப்பரங்கிரிக் குமரனூசல்.

---

விநாயகர் காப்பு.

### நேரிசை வெண்பா.

தேசம் புகழுந் திருப்பரங்கி ரிக்குகன்ற
னூசற்பா மாலைக் குவந்தருளும் - வாசத்
திதழிபுனை யும்பெருமா னீன்றமத யானை
வதனமுறு மெம்பெருமான் வந்து.

பேர்பரவுந் திவ்வியமண் டபத்தி னூடே
பிறங்குமுயர் செம்பவளக் கால்க ணாட்டி
யேர்பரவும் வயிரமணிக் கொடுங்கை மாட்டி
யிசைந்தொளிரு மரகதத்தால் விட்டங் கூட்டி
யார்பரவு முத்துமணி வடங்கள் பூட்டி
யவிர்கனக பீடமிட்ட வூசன் மீது
சீர்பரவும் பிடியொருமா னெருபான் மேவத்
திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (க)

செங்கமல மலர்மகளோர் வடந்தொட் டாட்டச்
சிலைநனுதற் கலைமகளோர் வடந்தொட் டாட்டச்
சங்கொளிர்கை ரதிமாதோர் வடந்தொட் டாட்டச்
சசிவதனச் சசிமாதோர் வடந்தொட் டாட்ட
மங்கலமே னகையரம்பை கவரி வீச
வளமருவுஞ் சுரமாதர் வாழ்த்துக் கூறத்
திங்கள்பல வெனத்தரளத் தார நாலத்
திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (உ)

சோதிமணி முடிகளுபர் முடிகண் மேவச்
சுடர்செய்மணிக் குண்டலங்கள் செவிகண் மேவ

வேதமிலா தவிர்வலயந் தோட்கண் மேவ
    விசைந்தொளிரு முத்தார மார்பின் மேவ
வோதருவீ ரக்கழல்கண் மலர்த்தாண் மேவ
    வுயர்ந்தநவ வீரர்விண்ணோர் பக்க மேவத்
தீதிலாத் தமிழ்ப்பயிர்கள் செழித்து மேவத்
    திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (௩)

நாலார ணங்களெனு மறைக ளார்ப்ப
    நவமுறுதம் புருவீணை நயங்க ளார்ப்பத்
தோலாத கவிப்புலவர் பாட லார்ப்பச்
    சுபமுயர்வாத் தியமாம்பல் லியங்க ளார்ப்பக்
கோலாக லத்தமரர் வாழ்த்த லார்ப்பக்
    குலவியமெய் யடியவர்தோத் திரங்க ளார்ப்பச்
சேலாரும் விழியாரா லாத்தி யேந்தத்
    திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (௪)

சோமனையொண் சிரங்கொள்பசு பதிகண் டாட
    சுவர்க்கப்பா லளித்தவுமை மகிழ்வி னாட
மாமதிப்பா ரணன்றீர மேவி யாட
    வாரிவெண்ணெ யுண்டிடுமோர் மாம னாடக்
கோமளமா ரமுதகும்பத் தனமார் தேவ
    குஞ்சரியா மமுதனையாள் குலவி யாடத்
தேமலியும் வெட்சியந்தார் புயங்க ளாடத்
    திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (௫)

கிம்புருக மொழியுரைத்த சாமி நாத
    தயாநிதியே மாநிதியே பெனச்சீ ரார்ந்த
கிம்புருடர் கருடர்வித்யா தரர்க ணூகர்
    கேதமகல் பொன்னூடர் மிகக்கொண் டாடத்
தும்புருநா ரதரினிய கீதம் பாடத்
    துபரம்பை யுருப்பசிமா திடைகண் காட்டுஞ்
செம்புருவ வின்மடவா ராட னீடுந்
    திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (௬)

நவ்விநேர் விழியாளோர் வசிய மாது
    நாயகனல் வெட்டுண்ட கைதா வென்னப்
பவ்வமா ருலகினருள் மகிழ்வு நீடிப்
    பரவப்பங் கேருகக்கை பாலித் தாண்ட

யவ்வனம ஞேன்மனியின் பாலா மேலா
யதார்த்தமிகு தெய்வானைக் கினிய லோலா
திவ்வியவண் சுனைநீர்வின் மாத ராடுந்
திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (எ)

அரனுதற்கண் வந்தவரே யாடி ரூசல்
ஆறுமுகங் கொண்டவரே யாடி ரூசல்
இரவிநிகர் மேனியரே யாடி ரூசல்
ஈராறு தோளுடையீ ராடி ரூசல்
உரவர்புக ழுரவுடையீ ராடி ரூசல்
ஊழகற்றி யாள்பவரே யாடி ரூசல்
திரமன்னு மந்தணர்சூழ்ந் திறைஞ்சிப் போற்றுந்
திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (அ)

சயங்கொள்வடி வேலுடையீ ராடி ரூசல்
தருசேவற் கொடியுடையீ ராடி ரூசல்
வயங்குசமு தாடுடையீ ராடி ரூசல்
வண்மயில்வா கனமுடையீ ராடி ரூசல்
புயங்கள்வரை யெனவுடையீ ராடி ரூசல்
புனிதவெட்சித் தாருடையீ ராடி ரூசல்
தியங்கிடா தருள்சுரந்து காக்கு மெங்கள்
திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (கூ)

பால்வண்ணற் கோமுரைத்தீ ராடி ரூசல்
பவளவண்ணற் றுணையந்தீ ராடி ரூசல்
மால்வண்ணற் கரசளித்தீ ராடி ரூசல்
வண்பொன்வண்ணற் கருள்புரிந்தீ ராடி ரூசல்
மேல்வண்ணச் சூர்தடிந்தீ ராடி ரூசல்
மேகவண்ணன் மருகென்றீ ராடி ரூசல்
சேல்வண்ண விழிமடவார் சிறக்குந் தூய
திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (க0)

தேறுமறை யாகமசாத் திரங்கள் வாழச்
செப்பரிய சௌமார சமயம் வாழ
வீறுதருந் திவ்யசடக் கரமும் வாழ
விபூதிருத்தி ராக்கமணி மேலாய் வாழக்
கூறுமழை முகில்வாழப் பசுக்கள் வாழக்
குறையகலந் தணர்புரியும் வேள்வி வாழச்
சீறிடா திதுபடித்தோர் கேட்டோர் வாழத்
திருப்பரங்கி ரிக்கரசே யாடி ரூசல். (கக)

திருஎவ்வுளூர்-இராமசாமி செட்டியார்.

---

# திருவிளையாடற் கருப்பொருள் வெண்பா.

---

## காப்பு.

### விநாயகக் கடவுள்.

தேமேவு கூடற் றிருவிளையாட் டெட்டெட்டும்
பாமேவு வெண்பாவாற் பாடவே—மாமேவு
மைம்மலையிற் கோடொன்றுன் மாபா ரதந்தீட்டுங்
கைம்மலையின் ருளெமக்குக் காப்பு. (க)

### சோமசுந்தரக் கடவுள்.

துருவிக்கும் பன்றிதரு குட்டிக்குந் தாழ்ந்த
குருகுக்கும் முத்தி கொடுத்த—வருளாளன்
செய்ய திருப்பாதஞ் சென்னியிற்கொண் டிந்நூலை
யுய்ய வுரைப்பா முவந்து. (உ)

### அங்கயற் கண்ணம்மையார்.

தென்னன் றிருமகளாய்த் தென்மதுரை வந்தருளி
முன்ன மரசு முறையாண்ட—கன்னி
யிருபோதும் முட்போது மேத்தித் தொழுவார்க்
கொருபோது மில்லையிடை யூறு. (ங)

### சுப்பிரமணியக்கடவுள்.

வேதனைக் குட்டி வியன்சூர் தனையட்ட
நாதன் றிருநாம நாடேறு—மோத
வினையகலு மல்லலெலாம் வேருடனே மாயு
மெனையனவுங் கைகூடு மிங்கு. (ச)

### நாமகள்.

சைவப் பரஞ்சோதி தாட்கமல முச்சியிற்கொண்
டையன் விளையாட் டறைவதற்குத்—துய்ய
மருவாரும் வெண்டா மரைவாழு மம்மை
யிருபாதங் காப்பா மெமக்கு. (ரு)

### திருநந்தி தேவர்.

வந்து சிவனடியை வந்திக்கும் வானவரை
முந்திப் பிரம்பான் முனிந்தொறுக்கு—நந்தி
யடிக்கமலஞ் சூடி யகவிருளைப் போக்கித்
துடிக்கமலம் மாய்ப்பார் துணிந்து. (சா)

### திருத்தொண்டர்கள்.

சுந்தரர் சம்பந்தர் சொல்லரசர் வாதவூர்
வந்தவ ராதிபடி வாழ்த்துவே—சந்ததமு
மன்புண்டா மின்புண்டா மாய பொருளுண்டா
முன்புண்டா மெல்லா முதிர்ந்து. (எ)

### அவையடக்கம்.

சுந்தரன்ற னாடலினைச் சொல்லத் துணிந்தெழுந்த
வெந்தரமு மென்னே யிதுநகைப்பே—செந்தமிழோர்
கொள்வா ரொருவேளை கூடலிறை தன்பாத
முள்வா ரதனு லுவந்து. (அ)

காப்பு முற்றிற்று.

---

### பாயிரம்.

### பாண்டித் திருநாட்டுப் படலம்.

சங்கப் புலவர் தமிழ்வீசுஞ் சம்புமைவே
ளங்கர சாண்ட வருள்வீசுஞ்—சங்கரனு
ரன்ப ரடிவீசு மாதலாற் பாண்டிநா
டென்பர் சிவலோக மிங்கு. (கூ)

### மதுரைத் திருநகரப் படலம்.

செங்கமலம் வெண்கமலஞ் சீர்யோக பீடமதா
யங்கமலை வாணிசித்திச் சாமதுரை—துங்கத்
திலதமாம் பூமிக்குத் தேரி னிகரா
யிலதிலது வேறுதல மிங்கு. (௰)

### தலவிசேடம்.

கேட்ட வுடன்முத்தி கிழான பாதகர்க்கும்
வாட்ட மிலாதளிக்கும் வாழ்மதுரை—நாட்டம்
புரியரனுர் வந்தாண்ட பொற்பதியீங் குற்று
லரியயனுந் தாழ்வா ரடி. (௧௧)

### தீர்த்தவிசேடம்.

அஞ்சுல நாட்டி யருங்கங்கை நீர்விடுத்து
மஞ்சுருந் தீர்த்த மருங்கலமைந்தா—னஞ்சுரா
னந்திமுத லோர்களிக்க நாடில்வே ளெப்புளதோ
விந்துமுடி நண்ணு மிறை. (௧௨)

### மூர்த்திவிசேடம்.

இத்தலத் திலிங்கமோ தெண்ணுன் கிலக்கணத்த
தத்தலத்துக் கொப்புளதோ வாயுங்கா—லெத்தலத்து
மிம்மூர்த்தி யேமூர்த்தி யேனெனிலிங் கேவாழ்வான்
மும்மூர்த்தி தம்மின் முதல். (கரு)

பாயிரம் முற்றிற்று.

———

## நூல்.

### இந்திரன் பழிதீர்த்த படலம்.

விச்சுவனை மாய்த்து விருத்திரனை வீட்டுபழி
சச்சைபோற் சுற்றக் கருத்தழிந்து—துச்சவன
னேற்றிக் கடம்பவனத் தெட்டானை மீதரனைப்
போற்றிப் பழியற்றான் போந்து. (கச)

### வெள்ளையானைச் சாபந்தீர்த்த படலம்.

சம்புவணி யம்புயத்தைச் சார்ந்தடையுந் தூர்வாச
னும்பர்பதிக் கியவவ னூர்ந்துவரு—மும்பலதைத்
தேய்க்கமுனி சாபத்தாற் றென்மதுரை நம்பனைநீர்
தோய்க்கவருள் பெற்றதுகான் றேல். (கரு)

### திருநகரங் கண்ட படலம்.

வாணிகனுஞ் சங்கரனும் வந்துகுல சேகரன்பா
லேணிசெய்க டம்பவன மென்றுரைக்கப்—பேணிமதி
சிந்தமிர்தத் தான்மதுரை செய்துமகப் பெற்றடைந்தான்
பந்தமறுத் தாதி பதம். (கசு)

### தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப் படலம்.

பண்டை யருட்படியே பார்வதிமூ வாண்டுகுயங்
கொண்டுமலை யத்துவசன் கோமகத்தி—லுண்டாய்ப்பின்
கோலோச்சி னுண்மதுரை கூறுகன்னி நாடாக
மாலோச்சி விண்ணுற்றான் மன். (கஎ)

### தடாதகைப் பிராட்டியார் திருமணப்படலம்.

திக்குவிச யஞ்செய்து செக்கானை வெல்லவரன்
பக்கமுற முன்சேர் பறம்பேக—நக்கனெழிற்
கன்னி தனைமணந்து கன்னிநகர் சுந்தரனென்
மன்னவனா யாண்டான் மகிழ்ந்து. (கஅ)

### வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம்.

செய்ய பதஞ்சலியுஞ் சீரார் புலிமுனியு
முய்ய நடமன்ன முண்ணவே—யையனவர்
காண நடித்தான் கடிமணத்தின் மற்றவரும்
பேண மதுரையினிற் பின். (கக)

### குண்டோதரனுக் கன்னமிட்ட படலம்.

ஊண்விஞ் சியதென் றுமைதருக்கிச் சென்றுரைப்பச்
சேண்விஞ் சியவூண் சிகரத்தை—நாண்விஞ்சக்
குண்டோ தரனுற் குறைப்பித்தான் கூடலினிற்
கண்டோர்க ளஞ்சத்தி கைத்து. (உ0)

### அன்னக் குழியும் வைகையு மழைத்த படலம்.

நாணியம்மை முன்னிற்க நாயகன்குண் டோதரற்கே
பூணியவூண் டேீர்க்கா வோடவரன்—சேணியகங்
கைவிடுக்க வாய்விடுத்தான் கைகொட்டி முன்குதித்தா
னைவிடுக்கக் கூடலினி னன்கு. (உக)

### எழுகடலழைத்த படலம்.

காஞ்சனைபாள் கோதமரின் கட்டுரையா னீர்படியும்
வாஞ்சையினைப் பூஞ்சிகையாள் வந்துரைக்க—நாஞ்சிலம
ராலவாய்ச் சொக்கனே ழத்தியையு மங்கீந்தா
னலவாத் தீர வழைத்து. (உஉ)

### மலையத்துவசனை யழைத்த படலம்.

தன்னம்வா ல் பற்றியுவர் தான்மூழ்க வுற்றதெனு
அன்னை மகி ழக்கூட லாதிபரன்—பொன்னுலகில்
வாழுமலை யத்துவசன் வந்தடையச் செய்திருவோ
ரேழுகடன் மூழ்குவித்தா னிங்கு. (உங)

### உக்கிரபாண்டியன் றிருவவதாரப் படலம்.

ஆனை யுரியானு மம்பிகையுந் தாமகிழ
வேனைவிண் ணோர்களுமே யேமமுறத்—தானையுடன்
சூரனை யன்றட்டுத் தொன்மதுரை யுக்கிரம
வீரனாய் வந்துதித்தான் வேள். (உச)

ஏ. சங்கரலிங்கம் பிள்ளை.

---

# தமிழ்ப்புலவர்கள் நிலைமை.

அங்கிலேய மொழியிற் சிறிது பயின்றசில தமிழ் நாடர்கள் தமிழ்ப்புலவர்கள் வித்தியாசாலைகளுக்குச் சிறந்ததோருடையும் உடுப்பும் இன்றிவருகின்றார்கள் எனக்கூறியதே யாமும் செவிப்புலனுற்றும். அஃதுண்மையே.

விரக ரிருவர் புகழ்ந்திடவே வேண்டும்
விரல்நிறைய மோதிரங்கள் வேண்டும்—அரையதனிற்
பஞ்சேனும் பட்டேனும் வேண்டும் அவர்கவிதை
நஞ்சேனும் வேம்பேனும் நன்று.
அடற்றலையும் ஆற்றலும் இல்லெனினும் தானை
படைத்தகையாற் பாடுபெறும்

என இவைபோன்றன பெரியாரும் கூறியுள்ளார்.

இரக்கப்போனாலும் பாக்கப் போகவேண்டும்
மந்திரம் தெரியாத குருக்களுக்கு மணியோசை பலம்

என்னும் பழமொழிகளும் அடிப்படுகின்றன.

ஆயின் வித்தியாசாலை நடாத்துபவர்க்கு அனுகூலமாகக் கருதியோ நகை செய்து இகழல் வேண்டுமெனக் கருதியோ தமிழ்ப்புலவர் வினை தடை செய்தகனாலேயோ இன்றியமையாததாகிய ஒன்று மாத்திரம் எடுத்துக் கூறாது விடுத்தனர் பாவம் பாவம். அங்ஙனம் எடுத்துக்கூறியோர் குலமக்களாதலின் நகைசெய்து இகழ்தல் வேண்டுமென்னும் கருத்துடையாரல்லர் எனத் துணிகின்றாம்.

நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. என்றலின்,

மற்றென்செய்ய வேண்டுமெனின் :—அக்குலமக்கள் செல்வராயின் வேண்டுவன கொடுத்துப் புலவர்கள் முகத்தில் தோன்றும் மகிழ்ச்சியைக்கண்டு தாமும் மகிழ்வர். வறியராயின் அன்புடன் இனிதுநோக்கித் தாமும் இரங்கித் துன்புறுவர். அது நிற்க, இனி இன்றியமையாததாகிய ஒன்று மாத்திரம் எடுத்துக்கூறாது விடுத்தனர் என்பதைக் கூறுகின்றாம்.

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகியாங்கு.
இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.
அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்

செல்வச் செவிலியாலுண்டு.
வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவண தெய்த விருதலையு மெய்தும்
நடுவண தெய்தாதான் எய்துமுலைப்பெய்
தடுவது போலுந் துயர்.
ஞானமும் கல்வியும் நாழியரிசியிலே.
டணமென்ன செய்யும் பத்துவிதஞ்செய்யும்.
கூண்டிலே குறுணி நெல்லிருந்தால்
மூலையிலே முக்குறுணி தெய்வம் கூத்தாடும்.

என்று இவைபோன்றவற்றைச் சிறிதாராயின் எல்லாவற்றுக்கும் பொருளே இன்றியமையாத தாயிருக்கின்றது.

"முனிவரு மன்னரு முன்னுவ பொன்னால்முடியும்".

என இங்ஙனம் கடந்த பெரியாரும் கூறியுள்ளார். தமிழ்ப் புலவர்கட்கும் அஃது ஒன்றுதான் குறைவு பட்டிருக்கின்றது. அவர்கள் நிலைமை இங்ஙனமாயின் சிறந்ததோருடை முதலியன உடுத்தல் அவர்கட்கு எங்ஙனமியலும்?

எல்லாமிருக்கிறது பெட்டியிலே
இலைக்கறி சடையச் சட்டியிலே

என்றபடி அவர்களது பொருளின்மையை மாத்திரம் மெல்ல விடுத்து மற்றைய எல்லாம் எடுத்துக்கூறப் புகுந்தால்தக்கதோர் மாதவேதன மின்றி மிகப் பரிதாப நிலையில் நின்று வருந்துகின்ற தமிழ்ப்புலவர்கள் என்ன செய்வார்கள். இலக்கண இலக்கியங்களைநன்குகற்றும் தக்கதோர் மாதவேதன மில்லாமையாற் கவலைப்படுகின்ற சில தமிழ்ப் புலவர்களை யாம் இங்கு எடுத்துக் கூறின் மனங்கரைந்து வருந்தாதவர் யாவர்? என்செய்யலாம்?

நன்றாங்கா லல்லவாக் காண்பவ ரன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்.
இடுக்கண் வருங்கா லநுக.
போதுமென்ற மனமே பொன்செய்யு மருந்து.

என இவைபோன்றனவற்றை எண்ணி எண்ணித் தான் அப் பொருளின்மையாலுண்டாகும் சவுர்சிபைச் சிறிது சிறிதாக மாற்றிக்கொள்ளல்வேண்டும். இக்காலத்துத் தமிழ்ப் புலவர்கட்கு அதைவிடினும்வேறே வழியில்லை போலும்.

இடுப்பொடிந்த கோழிக்கு உரற்குழியேகதி.
பூவேந்தர் முன்போற் புரப்பரிலை யெனினும்
பாவேந்த ருண்டென்னும் பான்மையாற் - கோவேந்தன்

மாற னறிய மதுரா புரித்தமிழோர்
வீறனையே சற்றே மித.

அடகெடுவாய் பலதொழிலு மிருக்கக் கல்வி
அதிகமென்றே கற்றுவிட்டோ மறிவில் லாமல்
திடமுளமோ கனமாடக் கழைக்கூத் தாடச்
செப்பிடுவித் தைகளாடத் தெரிந்தோ மில்லை
தடமுலைவே சையராகப் பிறந்தோ மில்லை
சனியான தமிழைவிட்டுத் தைய லார்தம்
இடமிருந்து தூதுசென்று பிழைத்தோ மில்லை
என்னசென்மம் எடுத்துலகி லிரக்கின் றோமே.

என்ற இச்செய்யுள்களையும் நோக்கின் பொய்யா மொழிப்புலவர் படிக்காசுப் புலவர்கள் காலத்திலேயே தமிழ்ப் புலவர்கட் குரிய செல்வப்பெருக்கு உள்ளங்கை நெல்லிக் கனிபோல நன்கு புலப்படுகின்றது.

தமிழிலே பிறந்து தமிழையே யுண்டு தமிழிலே வளர்ந்து தமிழையே பேசும் தமிழ்ச்செல்வர்களனைவரும் அச்செய்யுள்களையும் நினைந்தொறும் நினைந்தொறும தலைகவிழ்ந்து செல்லத் தக்கதோர் செயலேயன்றோ? மலையாளம் மைசூர் முதலிய சுதேசராஜப் பிரபுக்களும் சமஸ்கிருத பண்டிதர்களுக்கு மாத்திரம் உதவி செய்கின்றார்களே யன்றித் தமிழ்ப்புலவர்களுக்கு ஒரு சிறிதும் உதவிசெய்கின்றார்களில்லை; தமிழ்ச்செல்வர்கள் அதனைக் கண்ணுற்றும் செவியுற்றும் அங்ஙனம் செய்கின்றார்களில்லை. இதனை எவரோடுசொல்லலாம்? காலக்கொடுமை யென்றே கருதல் வேண்டும்.

தமிழ்ச் செல்வர்கள் வைவாகிக முதலிய காலங்களிற் புரோகிதம் சங்கீதப்புலவர் விகடகவி முதலோருக்கு மரியாதை செய்கின்றார்களேயன்றித் தமிழ்ப் புலவர்களைக் கௌரவப்படுத்தி ஒரு மரியாதையும் செய்யக் கண்டிலோம் கேட்டிலோம். சிலர் செய்யினும் சங்கீதப் புலவர் முதலோருக்குச் செய்ததிலும் பெரிதும் குறைவாகவே காணப்படும். இஃதென்னை பாவம்! பாவம்!!

தமிழ் நாட்டுப் பெருஞ்செல்வர்களிற் சிலர் ஒருப்படின் மதுரையின் கணிருந்த தமிழ்ச் சங்கம்போல ஒன்றேனும் நியமித்துக் காத்துவரல் அரிதாகுமோ? இங்ஙனம் ஒருப்பட்டுச் செய்யின் தமிழ்நாடுதமிழ்நாடாகித்தமிழ் மணங்கொண்டு எல்லோர்க்கும் புகழும் புண்ணியமும் விளைவித்தல் திண்ணம் திண்ணம்; திருவருளும் இங்ஙனமே கூட்டுக.

மாணவர்கள் தமிழ்ப்புலவர்களை அவாவுகின்றிலர் என்கின்றனர். நன்று. தமக்குரிய மனைவியை விட்டு அயலார் மனைவியை விரும்பி முயல்வது போலப் பதிபசுபாச இலக்கணங்களை ஆராய்ந்துணரத்தமக்குரிய தமிழ் மொழி

யைக் கல்லாமல் அவமதித்துவிட்டுப் பொருள் புகழ் ஒன்றே விரும்பி அங்கிலேய பாஷையொன்றையே பெரிதும் முயன்றுகற்கு மாணவர்கள் தமிழ்ப் புலவர்களை எங்ஙனம் அவாவுவாராவர்?

"புகழ்பொருள் பற்றுகப் போற்றிய கல்வி
இகழப் படுவன வென்றிசினோ ரான்றோர்."

தமிழ் நாட்டிற் சிலர் இந்து மகாவித்தியா சாலை பென்று பெயர் மாத்திரம் வைத்திருக்கின்றனர். அதில் தமிழ்ப்புலவர்களிலர். இருக்கினும் மாத வேதனம் சில; அச்சிலவும் மாதந்தோறும் கிடைப்பதரிது. அதிகாரம் செய்வதற்கு மாத்திரம் பற்பலர் எழுவர். மாதவேதன மென்றால் ஒருவரும் பேசார். இஃதென்னை, இந்து மகாவித்தியாசாலை யென்று பெயர் வைத்தற்கேற்ப மற்றும் ஒருதமிழ்ப்புலவரை நியமித்துத் தமிழை வளர்த்தா லன்றோ தகுதியாகும். மாம்பழ முண்ணுதவொரு பறவைக்கு மாம்பழவுண்ணி எனப்பெயர் வந்தது போலிருக்கின்றதே! என்னை!

தமிழ்மொழியில் தருக்க முதலிய நூல்கள் பெரிதும் இல்லை, அவையிற்றை இக்காலத்தில் எழுதுவாருமிலர் என்கின்றனர். இக்காலத்தில் அங்கிலேய பாஷையில் அவ்வகைப்பட்ட நூல்கள் தோன்றியதற்குக்காரணம் என்னை? அதனைச் சிறிதாராய்வராயின் அங்ஙனம் சொல்லப்புகார். அவ்வகைப்பட்ட நூல்களை மாத்திரமல்ல, அவற்றினு நுட்பமாகிய நூல்களைப்பெரிதும் எழுதவல்ல தமிழ்ப்புலவர்கள் இக்காலத்தும் இருக்கின்றனர்.

அவர்கட்கு வேண்டிய பொருளுதவி செய்து அவ்வகைப்பட்ட நூல்களை எழுதுவித்தல் வேண்டு மென்று தமிழ்நாட்டுப் பெருஞ் செல்வர்கள் சிறிதும் கருதுகின்றிலர். தமிழ் நாட்டிற் பரம்பரைப் பெருஞ் செல்வர்களும் இருக்கின்றார்கள். அச்செல்வர்தம் செல்வப் பிள்ளைகளும் மேலும் மேலும் அங்கிலேய பாஷையேயன்றிக்குலமொழியாகிய தமிழ்மொழியைக் கற்று உணர்ந்து உரைத்துக் கேட்டுப் பழைய நூல்களைச் செல்வாக்கிலேறுத வண்ணம் பலபலவாக அச்சிற் பதிப்பித்தும் ஏட்டில் எழுதுவித்தும் செல்வாக்கில்வைக்கின்றார்களிலர்.

பெரிதும் செல்வப் பெருக்கில்லாத தமிழ்ப்புலவர்கள் இவ்வெண்ணங் கொள்வதனாற் பயனென்னை?

செல்வப் பொருளோ சில வாதற் பாலன
பல்வகை யாகும் பசிப்பிணியான்—ஒல்கிய
மக்களோ பற்பலர் மாநிலத்துச் செல்வம்
தக்காங்கு நேடத் தகும்.

மாகறல் - கார்த்திகேய முதலியார்.

———

## தோத்திரப்பா.

படங்கொண்ட சேடன் சுமக்கின்ற புவியைப்
பரிக்கின்ற தயரதன்றன்
பாலனாய் வந்துதா டகையையென் றகலிகை
படுந்துயரை மாற்றிமிதிலை
யிடங்கொண்டு வின்முறித் துச்சனகி தனைமணந்
திளைதாய் சொல்லின்வண்ண
மிலக்குவ னொடுங்கா னடைந்துகர தூடணு
தியர்மாளவாளிதொட்டு
வடங்கொண்ட பூண்முலை யரக்கியை யறுத்துமா
ரீசனை வதைதத்துமனை
வங்கணங் கொடுசேது பந்தனஞ் செய்திரா
வணனையெம னுலகமேற்றித்
திடங்கொண்ட வீடணற் கரசுதவிராகவன்
திருமருக னேயென்னையாள்
சிந்திப்ப வெட்டாத முத்தமிழ்த் தேசிகா
சிவயோக நாதமுதலே.

வசுதேவ புத்ரனாய் நந்தகோ குலமதில்
வளர்ந்தெசோ தைப்பிராட்டி
வனமுலையி லமுதுண்டு பூதனை யெனுங்கஞ்சன்
வரவிட்ட பேயைமாய்த்துப்
பசுமேய்க்கு நாளையிற் கோவர்த்த னத்தைப்
பறித்தொருகை யாற்கவித்துப்
பாறயிரும் வெண்ணெயு நெயுந்திருடி யுண்டிடையர்
பாவையர் தமைப்புணர்ந்து
விசுவாச முற்றபாண் டவதூத னாகிமேல்
விசையனுக்கிரதமூர்ந்து
வெற்றிவிழை கஞ்சன்முத லானதுட் டரையெலாம்
வென்றுகைச் சக்கிரத்தாற்
சிசுபால னைக்கொன்ற கண்ணன்மரு காகுகா
சிறியேனை யாளவருவாய்
சிந்திப்ப வெட்டாத முத்தமிழ்ச் தேசிகா
சிவயோக நாதமுதலே,

3. பணியிட்டு மெய்யின்மண மிட்டுவத னத்தினிற்
பசுமஞ்ச ளிட்டுவன்னப்
பாவாடை யிட்டிரு தனத்திலுத் தரியமொரு
பாற்றெரிய விட்டுமையுங்
கணிலிட்டு நெற்றியிற் பொட்டிட்டு மலரொத்த
கையில்வளை யிட்டுவைரக்
கணையாழி விரலிலிட் டுப்பொற் சிலம்புமிரு
காலிலிட் டாடவர்க்கே
தணியாத மோகமிட் டுப்பொருள் பறிக்கத்
தனித்தலவு கின்றவஞ்சத்
தையலர்கண் மையலில் விழுந்திடா மற்சூரர்
தலைமவெல்ல வேலெடுத்த
திணிதோள குறவள்ளி மணவாள கார்த்திகைத்
திருநாள வெணையாளவா
சிந்திப்ப வெட்டாத முத்தமிழ்த் தேசிகா
சிவயோக நாதமுதலே.

4. எள்ளளவு மெய்ம்மொழிகள் பேசாது நாப்பொய்க்
கிருக்குமிடம் விழியோவுன
தெழில்கண் டிடாதுசிற் றிடைமாத ரைக்காண
விச்சிக்கு மிருகைகளோ
கள்ளவிழு மலரெடுத் தர்ச்சியா செவியுநின்
கதைகேட் டிடாவெனதிரு
காலுநீ மனமகிழ்ந் துறைதிருப் பதியிலெக்
காலுமே காதவஞ்ச
வுள்ளமோ சற்றேனு நினைகிலா திவ்வா
றுறுப்படைந் துழலுகின்றே
னுள்ளபடி யுன்னிட முரைத்துவிட் டேன்கருணை
யுடனுள்வ துன்பரங்காண்
டெள்ளமுத மேகரும் பேசருக் கரையே
திருப்பரங் கிரியின்முருகா
சிந்திப்ப வெட்டாதமுத்தமிழ்க் தேசிகா
சிவயோக நாதமுதலே.

5. நீலமலை போன்மேனி யுந்தலைக ளாறுட
னெருப்பனைய விழிமுனுன்கு
நிலவொத்த தந்தமுங் கைம்மூ விரண்டுமாய்
நிலைகலங் கிடமுனிந்து

காலனொரு பாசமுங் கைக்கொண்டு மேதிக்
கடாவேறி யென்முன்வந்து
கட்டடா குத்தடா வெட்டடா சீவனைக்
கவரடா வெனுமுன்னநீ
வேலுமயி லுங்கிங் கிணிக்காலு மாகநவ
வீரருட னிங்குவந்து
வென்றடித் துத்தரத் திச்சமனை யுனதுதாள்
வீடெளிய னுக்குதவுவாய்
சீலசர வணபவ கடம்பசண் முககுகா
தேவர்சிறை மீட்டதேவே
சிந்திப்ப வெட்டாத முத்தமிழ்த் தேசிகா
சிவயோக நாதமுதலே.

6. காவல்புரி வேனென் றுரைத்துமா னுடர்பாற்
கருங்கோழி யுஞ்சேவலுங்
கள்ளுமுட் டையுமுருங் கைக்காயு மாட்டுக்
கடாவுமுத வென்றுவாங்கிச்
சீவனஞ் செயுமாட னிருளன் கறுப்பணன்
செல்விபத் திரகாளியித்
தேவதை களைக்கடவு ளென்றெண்ணு சிந்தையாற்
சிந்தியே னெந்தநாளு
மாவலுட னுன்னையே பாடுவே னெளியேனை
யாதரிக் கக்கருணைசெய்
தன்பருக் கெளியவா விருமாது பக்கத்
தமர்ந்தவா வெனையாண்டவா
சேவலங் கொடியுடைய வரவேல வாமறைது
திக்கின்ற வாவிங்குவா
சிந்திப்ப வெட்டாத முத்தமிழ்த் தேசிகா
சிவயோக நாதமுதலே.

ஒரு தமிழ்ப்புலவர்.

---

பிரமஸ்ரீ

சேஷகிரி சாஸ்திரியாரவர்கள், எம். ஏ.

இறந்துழிப் பாடப்பெற்ற

கையறு நிலை.

---

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கல்வியினிற் சேடனையு நற்குணத்திற் குன்றினையுங் கடுத்து நின்ற
செல்வமுறு கலைஞநிற்குச் சேடகிரிப் பெயரிட்ட செம்மலை நோக்கிப்
பல்விதத்துங் களிசிறந்தேம் பாரிடத்தி னின்சீர்த்தி பரவல் கண்டே
மொல்வகையி னின்னன்புக் குரியேமாய் நாணுளுமுவவா நின்றேம். (க)

எந்தமக்கோர் பற்றுக்கோ டெனவிருந்த மறைபவனே யெம்மி னீங்கி
விந்தையினும்விந்தையெனமறைந்ததற்கோர்புதுப்பொருளும் வியப்பகாட்டி
யந்தரர்கள் கைம்முகிழ்த்து நினையழைத்தா ராதலினு னன்னுர் மாட்டு
மந்தநகை புரிந்துமன மகிழ்ந்தும்ப ருலகுசென்ற வகைமை யென்னே! (உ)

இவ்வாறு யாமன்றி யெம்போலு மேனையரு மிருத்த றோர்ந்து
மெவ்வாறு பிரிந்தனைகொ லெம்மிரக்கங் கேட்டிலைகொ லின்சொ லாள
வொவ்வாது நினதுசெய லொருமொழியு மெமக்குரையா தோடிப் போதல்
செவ்வாக யாவரே கொள்கிற்பார் சேடகிரிச் செம்ம லேயோ! (ங)

ஆரியமாக் கடல்கடைந்திட் டாரமிழ்த மளித்தவெழி லண்ண லேயோ
சீரியசெந் தமிழ்க்கடலிற் குளித்துமுத்த நல்கியவெஞ் செல்வ னேயோ
பாரியலு மாந்திரத்தின் மணமனைத்துங் கொண்டுலவு பவன னேயோ
வேரியபன் மலர்களெனு மொழிகளெலா மேற்கொண்ட வேந்தனேயோ! (ச)

ஷி - வேறு.

பழிநூ றுலகர் பகர்ந்தாலும் பாராட் டாமன் மேற்கொண்ட
வழியே சென்று கொள்கைகளின் வாய்மை கண்டு மகிழ்ந்தவற்றை
யெழுதா வெழுத்தி னிட்டெவரு மேற்கு மாறு செய்தவனே
மொழிநூல் வகுத்தாய் நின்செல்வு முறையோ முறையோ முறையேயோ ()

உண்மை திவ்ரு வுத்தமனே யொழுக்க நலஞ்சான் றுயர்ந்தவனே
தண்மை செறிந்த வருட்கடலே தன்னை யடுத்தார் தமக்கரணே
வண்மை கனிந்த கற்பகமே மயக்க விருளை நீத்தவென்றே
நுண்மை மிகுந்த வறிவுடையாய் நுவலா யெங்ஙன் ஒளித்தனைகொல்? (ரு)

தரவு கொச்சகக்கலிப்பா.

ஏழிசைக்கு மிருப்பிடமே யெம்மொழியு முணர்ந்தவனே
யாழிசைத்தல் வல்லவனே யாவருக்கு நல்லவனே

யாழிபுடை சூழுலகை யானந்த வுலகுசெய்தாய்
பாழென்ன நீயிறந்திப் பார்தோன்றச் செய்தலெவன்? (எ)

துணியிழந்த மதியென்னச் சுவையிழந்த கூத்தென்ன
வுணர்விழந்த வுடலென்ன வொளியிழந்த விழியென்ன
மணியிழந்த பணியென்ன மணமிழந்த மலரென்ன
வணியிழந்த மகளென்ன வருஞ்சென்னை தோன்றுமரோ. (அ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பற்பல பாடை யுள்ளும் பரிவுட னுழைந்தா ராய்ந்து
சொற்பொருட் சார ணங்க டுகளறத் தோன்று மாறு
செற்பமும் விதண்டை தானுஞ் சேராது தெளிவி னோடுங்
கற்பவர் களிகூர்ந் தென்றுங் கருதிடச் செய்த கோவே! (கூ)

மன்றினில் வான ணூர்த மலரடி புகுந்தா யேனு
நன்றிற னறிவு தூய்மை நுவலரு செஞ்சொ றேர்ந்தோ
ருன்றனை மறத்த லுண்டோ வுயர்வினு முயர்ந்த வண்ண
னன்றெலா முருக்கொள் சேட கிரீயெனு நங்கோ மானே! (கo)

வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரி.

---

## சரித்திர விநோதாமிர்தம்.

(196-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

இஃது இங்ஙனமாக.—நம்பாண்டியர், இடைச்சங்கமிருந்த கபாடபுரம் முடத்திருமாறன் காலத்துக் கடல்கொண்டபின் தோன்றியதும், அதனினு முன்பே அங்ஙனம் கடலாலழிந்த முதற்சங்கமிருந்த தக்கண மதுரையால் தான் உத்தரமதுரையெனக் கூறப்பட்டதும், தற்காலத்தே யுள்ளதுமாகிய மதுரையைச் சார்ந்த கொற்கை யென்னும் பதியை ஆண்டுவந்த வோர் சிற்றரசரென்றும், அங்ஙனமன்று, இவர் மதுரையரசரே, இவர் தமயன் இவ்வரை இளவரசாகக் கொற்கையி லிருத்தினரென்றும், சிலகாலங் கொற்கையே இராசதானியாக இருந்து வந்ததென்றும், இரண்டும் இராதானியாக விருந்துவர, இவரும் இவர் தமயன் வரதுங்கராம பாண்டியரும் ஒருமித்துந் தனித்தும்,கொற்கையினு மதுரையினும் வதிந்துவந்தனரென்றும் பலபடக்கூறுவர். கொற்கையம்பதியில் இவர் இருந்து வந்தனரென்பதை நறுந்தொகையில்,

"வெற்றி வேற்கை வீர ராமன்
* கொற்கை யாளி குலசே கரன்புகல்

---

* மதுரைமாற மங்கலவு பாந்திமத்துறங் கொற்கையே இதுவென, இந்திய பூர்விக விவரணப் புத்தகம் 6-ம் காண்டம் - 80 - 83 - ம் - பாகங்களிற் கூறப்படுகிறது.

நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை தன்னாற்
குற்றங் களைவோர் குறைவிலா தவரே"

என்பதாற்றெளிக.—கொற்கையைச் சூழ்ந்த நாட்டை "* மாறோகம்" என்றும், அந்நாட்டார் பெண்மகளைப் பெண்மகன் என்றுங் கூறுபவெனத்தொல்காப்பியச் சொல்லதிகாரச் சேனாவரையில் ஓர் குறிப்புக் கிடைப்பதனால், இக்கொற்கை நிடதநாட்டிற்கு மாவிந்தபுரமும், விதர்ப்ப நாட்டிற்குக் குண்டின்புரமும், கோசல நாட்டிற்கு அயோத்தியாபுரியும் போல்வதாகிய நகரமாம் - என்றும், அது,

"தோடுகமழ் சந்தன வனத்திடை துளைந்தே
நீடுதமி ழின்சுவை யளைந்துநெடு நாளா
யாடுமயி லன்னவர்க ளன்னநடை போலே
வாடைமிசை தென்றல்புகும் வையைவள நாடு."
"வெவ்விருக ணாரிடையை மின்னென மருண்டே
செவ்விபெறு கேதகை செறிந்தலரு நாடு
நவ்வியனை யாரளக நள்ளிருள தென்றே
மவ்வலரு சேயலரும் வையைவள நாடு"

எனப் புகழத்தக்க வையைவள நாடாகிய பாண்டி நாட்டின் நகரமாதலால், கூறியபடியே மதுரைக்கு இரண்டாவதாய் அல்லது† வதிலாய் இராசதானியாக இருந்துவந்த தென்பதே தகுமெனக் கூறுவரொரு சாரார். இதனை இங்ஙனமே நிறுவி, மதுரைக்கு முற்பட்டபூர்வ இராசதானி கொற்கையென்பதே ஒத்தது எனக்கோடல் நலம். வேறும் இதற்காதாரமாக, அக்கொற்கை வெகுபூர்வ பட்டணமா யிருந்து வந்ததென்பது, மதுராபுரியின் வேறாய தென்பதும்,

"....................................பாண்டியனாடு
மழைவறங் கூர்ந்து வறுமை யெய்தி
வெப்பு நோயுங் குருவுந் தொடரக்
கொற்கையி லிருந்த வெற்றிவேற் செழியன்."
* * * * *

என்னுஞ் சிலப்பதிகாரத்து உரைபெறு கட்டுரையும்,

"தெற்கட் குமரி யாடிய வருவேன்
பெற்றோர்ச் செழியன் கொற்கையம் பேரூர்க்
காவதங் கடந்து... ... ... ... ... ..."

என்னும் மணிமேகலையின் ஆபுத்திரன்திறமறி வித்தகாதையும், வெளியிட்டுரையா நிற்பதோடு, பாண்டியர் பழைய விராசதானியே யென்று சிந்

* இஃது புறநானூற்றில் 'மாறோக்கம்' என்றே யாளப் பட்டுள்ளது.
† இங்ஙன மரியதிசைச் சொற்கள் மருவலை ஆங்காங்குக் கண்டுணர்க.

தாமணி சிலப்பதிகாரமுதலிய அரிய பெரிய கிரந்தங்களைத் திருத்தி எழுதா வெழுத்திலேற்றிய நுட்பக் கல்விமானும் * பெரும்புலஞசிரியர், † வீயலர் என்பவர்களோடு பொருவநுவலா நிற்பர். கொற்கைக்கும் முற்பட்ட இராசதானி "கலியாணபுரம்" எனுமொன்றெனக் கூறுவாருளரேனும் கேவலாதாரங்களு மதற்காதரவாய்க் கிடைத்தில எனவும், இற்றைக்கு உதா-வருடங்களின்முன் சொற்றவிக் கலியாணியை யாண்டானேரரசு, இலங்காபுரிக் குரவனொருவனைப்படுத்திய கொடுமையைத் தாங்கலாற்ருது, அத்தீவின் காவேற்றவதைகள், சமுத்திரம் புரண்டு அவன் நாட்டை யழிக்கவென ஆக்கியாபித்தவண்ணம், சிந்துமுந்திப் பெரும்பட்டணமிலக்கம், பாதவகிராமந் தொள்ளாயிரத்தெழுபது, நன்முத்துக்குளிப் போர்பதி நானூறு ஆக முக்காலே மூன்றுவீச அரைவீசமுமாகவக் கலியாணபுரிப் பிரதேசத்தை அமிழ்த்ததென்னுமது பெருநம்பிக்கைக்குரியதல்ல தாகுதலே அறிவாற்றெளிக,எனவும் கூறுவாருமுளர். இதை யூன்றியுள்ளக் கொற்கையும் மதுரையுமென்றதுபோற் கொற்கையுங் கலியாணபுரியுமா யோர் காலிரண்டிடமும் அரசு வாசத்தானத்ததா விருந்திருக்கலா மென்பதொரு புடையொப்புமாகலாம்.

கொற்கை நம் பரதகண்டத்தின் தென்கீழ்த்திசையில் வியாபார தோரணையிலுயர்ந்து சிறந்த முத்துச்சிப்பிகள் குளிக்குந்தலமா யிருந்ததெனவும், அதன் பெருமையனைத்தும், பின்னல் ‡ ஏதமாபுரம் பாரசீகமாகியவற்ருேடு வர்த்தகப் பொலிவுற்றதும், தென்சமுத்திரக்கரைத் துறைப்பட்டணங்களில் ஐந்தாவதாகக் கொள்ளுஞ் செல்வப்பெருக் குற்றதுமாகிய || காயற்பட்டணத்துக் கேறியதெனவுஞ், சரித்திராசிரியர்கள் காட்டியுள்ளார்.

இங்ஙனங்கூறிய இவையனைத்தின் நுட்பவாராய்ச்சியானும், இக்கொற்கையை இராஜதானியாகக் கொண்டாராகு நம் அதிவீர ராமபாண்டியர், மேலேயுரைக்குமாறு கச்சியப்பராதியர்க்கு முந்திய கவியெனல் ஐயமற விளங்குவதாம்.

"எதிர்மலைந் தேற்ற வெஞ்சமத் தரச ரிடுதிறை கடையளந் தறியா
மதுரையும் புகாரும் வஞ்சியும் புரக்கு மானவேல் வழுதியர் பெருமான்
அதிர்பொலன் கழற்கா லடலதி வீர னறிறபத் தெரிந்துநன் கிசைத்த [பார்,
முதுமொழிக் கூர்ம புராணமுற் றுணர்ந்தோர் முத்திவீட் டினிதுவீற் றிருப்

என்னுங் கவி யுபசாரமேற்று. மேலே "சங்கப் பலகையின் விசேடம்" என்னும் மகுடத்தில் நம்பாண்டியரின் சமயஞரியற்றிய பிரமோத்தர காண்டத்தைப்பற்றிய "கறங்குதிரைப் பெருங்கடல் சூழ்வனி......" என்ற கவியு மித்தகையதே யாமென்பதை யாண்டுக் காண்க.

---

* Periplus. † Wheeler. ‡ Aden.

|| காயல்=கழிக்கரைத் துறையினை யுடையது.

இப்பால், "இகலரசரேறு" ஆகிய நம்பாண்டியமா நாவலரின் பெருமையும், * கூர்மபுராணத்தின் பெருமையும், "ஆண்டியிலிருவர் - பாண்டியிலிருவர்" என்றும், "கூர்மம் புகுந்த வூரிற் - குடியிருக்க லாகாது." என்றும் வழங்கும் பழமொழியான் விளங்கும். "ஆண்டியி லிருவர்" என்பதற்குத் தமிழ்க்கவி கூறும் புலமைத் திறமை வளமிக்கார், "ஆண்டானடிமை" வழக்கை மேற்கொண் டொழுகுபவரும்,

† "உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று"

என்ற மெய்கண்ட சாத்திரம் பதினான்கும்,

‡ "தசகா ரியமூன்று தக்கதொடை மூன்று
நிசவாச் சிரமமே நிட்டை—வசமிரண்டு
மாலையுமஃ தேசித்தி மன்னுவெண்பா வோடுமணி
வேலைவிழி யாளே விள"

என்ற பண்டார சாத்திரம் பதினான்கும் ஆகிய ‖ ஆகமக் குறிகாட்டுஞ் சைவசித்தாந்த சாத்திர வுரிமைப் பெருமான்களாகிய கச்சியப்ப சுவாமிகளும், சிவஞான யோகிகளும் ஆகிய இருவர் என்றும், "பாண்டியிலிருவர்" என்பதற்குப் பன்னூலாசிரிய தீர்க்க பண்டிதர்களாகிய வரதுங்கராம பாண்டியரும் அதிவீர ராமபாண்டியரும் ஆகிய இருவர் என்றும், இந்நால்வருந் தமிழ்த் தெய்வத்தைத் தமக்கே சிறந்த வுரிமைத் தெய்வமாகக் கொண்டவ ரென்றும், அதிகப்படவும், வேறாகவுங்கூறுப. "கூர்மம் புகுந்தவூரிற் குடியிருக்க லாகாது" என்பதற்கு,—கூர்ம புராணத்தை நன்குணர்ந்த புலவர் வசிக்கு மூர்களில் ஏனைபுலவர்கள் தத்தம் பெருமையுஞ்

---

* கூர்மம்—கு + ஊர்மம்—கௌர்மம்—மெல்ல நடந்தூர்ந்து செல்லுவது, குற்சிதமாகிய வேசமுள்ளது, சலத்தைக் கெடுப்பது.

† திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபாவிருபது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்,

‡ தசகாரியம், உபதேசப் பஃறொடை, தசகாரியம், சன்மார்க்க சித்தியார், சிவாச்சிரமத் தெளிவு, சித்தாந்தப் பஃறொடை, சித்தாந்த சிகாமணி, உபாய நிட்டை வெண்பா, உபதேச வெண்பா, நிட்டை விளக்கம், அதிசயமாலை, நமச்சிவாயமாலை, தசகாரியம், பஞ்சாக்கரப் பஃறொடை,

‖ ஆகமக்குறி காட்டல் இவை - உ௰அ - ஆகிச்சிவாகம மாகிய, காமிக முதல் வாதுள மீறாகவுள்ள இருபத்தெட்டனையுங் குறித்தல்.

சாதுரியாதிகளுந் தோன்றப் பொருமைபெற வாழக் குடிப்புகுதல் அரிதின ரிதா மெனவும், வேருகவுங் கூறுப.

[☞ ஞானபோதினியின் ஸம்புடம் IV, புத்தகம் 4-முதற்கொண்டு பக்கம் - 150-ல் சரித்திர விநோதாமிர்தத்தில் 5 - ம், வரியில், அரசனு னென்பதை அரசானெனவும், ஷை 152-ம், பக்கம். 10-ம் வரியில், திரு பெயரும் - என்றதின் பின், வழக்கற் கேது வென்னே யெனின், அது விபற் சுவின் பரிணய பந்தத்தின் பின்னர் எனவும், 154 - ம் பக்கம் 7 - ம் வரி யில், மதுரையிலேயே என்பதை மதுரையிலே எனவும், 194 - ம் பக்கம் 15 - ம் வரியில் அ௦சூ௦௨௦ - என்பதை 864000 - எனவுங் கொள்க.]

சி. சாமிநாத பிள்ளை.

---

## சமாசாரக் குறிப்புகள்.

---

**சரித்திர விநோதாமிர்தம்** என்னும் அதிவீரராம பாண்டியன் சரித்திர த்தை நாம் பார்வையிட்டேம். உயர்ந்த செந்தமிழ் நடையில் முன்னின்ற பெயருக்கொப்ப விநோதமாகவே எழுதப்பட்டுளது. தொல்காப்பியாதி இலக்கணங்களும், சிந்தாமணியாதி இலக்கியங்களும், ஏனையவும் இதில் ஆள ப்பட்டுள்ளன. கொச்சி திவான்ஜிபவர்களும், நியாயாதிபதிகளாதியவர்களும், ஏனைக்கனவான்களும், நாமும் இதன் நலம் விரும்பிக்கைச் சாத்திட்டுளோம். ஞானபோதினியின் III. 4-ல் - நூல்விழைவு எனவும், IV. 4, 5 - ல் - சரித் திரவிநோதாமிர்தம் எனவும் அதிற்சில பாகங்களை வெளியிட்டுளோம். இன் னும் - 2 மாதங்களில் இஃது அச்சாகி வெளிவந்து நிலவும் போலும்.

**பிரமஸ்ரீ சேஷகிரி சாஸ்திரியா ரவர்கள், எம். ஏ;**—நமது சென்னை மாநகரத்திலுள்ள இராசதானிக் கலாசாலையிற் சம்ஸ்கிருத பட்டாசாரியராக வும் சப்தத்துவ சாஸ்திர நிபுணராகவும் இருந்த இப்புலவர் பெருமான் இம் மதி 4-ஆந்தேதி யன்றைப்பகல் ஒருமணிக்குக் காலஞ் சென்றன ரென்பது கேட்ட பாஷாபிமானிகள் யாவரும் பெரிதுந் துக்கப் படுவார்களென்பதற்கு ஐயமில்லை. இவர் சம்ஸ்கிருத பாஷையிலேயே கலாசாலையில் தலைமைப் புலமை நடாத்தினு ரெனினும் சுதேச பாஷைகளிலும் பெரிதும் உழைத்து வந்தார். இவ்வாரிய சிகாமணிக்கு ஐரோப்பிய பாஷைகளில் ஆறும் இந் திய பாஷைகளிற் பன்னிரண்டும் எழுதப் பேச விவகரிக்க வருமாம். இவர் இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மானியா, அமெரிக்கா முதலிய இடங்களிலும் மிகப்பேர் பெற்றவரென்ப. இத்தகைய பெரும்புகழாளர் பிறவியாற்றமிழ் மொழிபேசுவோரே யாதலின் தமது வீட்டின்கட்பேசு மொழி தமிழேயா யிற்று. அத்தமிழ் மொழிக்கு இவர் 'திராவிட சப்ததத்துவம்' என்னும் பெயரிய தோர் புதுமை வாய்ந்த இலக்கணமும், 'தமிழ்க்கவி சரிதம்' என் னுநூலுஞ் செய்து நம்பாஷையை முன்னுக்குக் கொண்டுவாரா நின்றனர். இவ்வளவு பெரும் புலமை வாய்ந்த நமது சேஷகிரி சாஸ்திரியார் காலஞ் சென்றமை நமது தமிழ்நாடு செய்த தவக்குறைவே யன்றித் தெலுங்க நாடு முதலிய பிறநாடுகளுஞ் செய்த தவக்குறைவுமாம் என்ப தொருதலை.